8—1

மான ரசமாத்திரத்தை அறியும். ஆக்கிராணம் பிருதுவியினம்சமானபடியினாலே பிருதுவியின் குணமான கந்தமாத்திரத்தை யறியும் இப்படி யைந்துமொன்றோடொன்று கூடாதபடியினாலே ஒன்று மற்றொன்றின் குணங்களைக் கிரகிக்கவறியாது. அந்தக்கரணத்திலைந்துமாத்திரையு மொன்றாய்க் கூடினதுகொண்டு ஐந்திந்திரியத்தினாலும் ஐந்துவிடயத்தையும் அறியும். இந்தச் சாத்தீககுணத்திலுண்டான வந்தக்கரணமைந்தும் ஞானேந்திரிய மைந்துமாகப் பத்துஞ் சாத்திகாம்சமானபடியினாலே ஞானசாதனமாயிற்று.

இன்னம் ஐந்து பூதத்தினுடைய விராசதாம்சத்திலே பூதத்திற் கோரொருமாத்திரையெடுத்து ஒன்றாகக்கூட்டிவைத்தது வியானாதி பஞ்சவாயுக்களாயின. இதில் வியானவாயு ஆகாசத்தினம் சமானபடியினாலே ஆகாசத்தைப்போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராணவாயு வாயுவினம்சமானபடியினாலே வாயுவைப்போல இருதயத்திலிருந்து நாசியாதிபரியந்தம் அலையும். அபானவாயு அக்கினியினம்சமானபடியினாலே அக்கினியைப்போலச் சடராக்கினியாக வுஷ்ணித்துக் கொண்டு குதத்தைப்பற்றி நின்று உண்ட அன்னபானாதிகளைச் சீரணிப்பிக்கும். சமானவாயு அப்புவினம் சமான

8-1

மான ரசமாத்திரத்தை அறியும். ஆக்கிராணம் பிரு
துவியினம்சமானபடியினாலே பிருதுவியின் குண
மான கந்தமாத்திரத்தை யறியும் இப்படி யைந்து
மொன்றோடொன்று கூடாதபடியினாலே ஒன்று
மற்றொன்றின் குணங்களைக் கிரகிக்கவறியாது. அந்
தக்கரணத்தி லைந்துமாத்திரையு மொன்றாய்க் கூடி
னதுகொண்டு ஐந்திந்திரியத்தினாலும் ஐந்துவிட
யத்தையும் அறியும். இந்தச் சாத்திககுணத்தி லுண்
டான வந்தக்கரணமைந்தும் ஞானேந்திரிய மைந்
துமாகப் பத்துஞ் சாத்திகாம்சமானபடியினாலே
ஞானசாதனமாயிற்று.

இன்னம் ஐந்து பூதத்தினுடைய விராசதாம்
சத்திலே பூதத்திற் கோரோருமாத்திரையெடுத்து
ஒன்றாகக்கூட்டிவைத்தது வியானாதி பஞ்சவாயுக்க
ளாயின. இதில் வியானவாயு ஆகாசத்தினம் சமா
னபடியினாலே ஆகாசத்தைப்போலச் சர்வாங்கமும்
வியாபித்திருக்கும். பிராணவாயு வாயுவினம்சமான
படியினாலே வாயுவைப்போல இருதயத்திலிருந்து
சியாதிபரியந்தம் அலையும். அபானவாயு அக்கி
னியினம்சமானபடியினாலே அக்கினியைப் போலச்
டராக்கினியாக வுஷ்ணித்துக் கொண்டு குத
த்தைப்பற்றி நின்று உண்ட அன்னபானாதிகளைச்
ரணிப்பிக்கும். சமானவாயு அப்புவினம் சமான



து மாத்திரையு மொன்றாய்க் கூடினது கொண்டு
கன்மேந்திரிய மைந்தின் வழியினாலு மைந்து தொ
ழிலையுஞ் செய்து முடிக்கின்றது. இந்த வாயுக்க
ளைந்துங் கன்மேந்திரிய மைந்தும் ஆகப்பத்து மி
ராசதாம்சமான படியினாற் கிரியாசாதனமாயின.

அந்தக்கரணம்-ரு-ம், ஞானேந்திரியம்-ரு-ம்,
வாயுக்கள்-ரு-ம்,கன்மேந்திரியம்-ரு-ம்,ஆக-உ0-தத்
துவமும் சூட்சுமசரீரமென்றுசொல்லப்படும். இந்
தச்சூட்சுமசரீரத்தை மாயாப்பிரதிவிம்பராக விருக்
கின்ற வீசுரன் அவித்தையாப்பிரதிவிம்பராயிருக்கி
ன்ற சீவருக்குப்பேருக்கொவ்வொரு சரீரஞ் சிருட்
டித்துக்கொடுத்தார். அப்போது பஞ்சபூதத்தினு
டைய சாத்தீகாம்சமு மிராசதாம்சமுஞ் செலவழி
ந்தன. தாமத குணமாத்திரஞ் சேடித்தது. சூட்சம
சரீரம் வாங்காத சீவருக்கெல்லாமின்னமொரு சிரு
ட்டிக்காகட்டு மென்று நிறுத்தினார். இப்படிச் சூ
ட்சும சரீரஞ்சொல்லப்பட்டது.

இனித் தூலபூத வுற்பத்தி சொல்லுகின்றோம்.
அதெங்ஙனெனில் மிஞ்சின தாமதமாயிருக்கின்ற
வைந்து பூதத்தையு மொன்றிரண்டாகப் பகுத்து
முதற் பாதி யைந்தையு மொன்று நாலாக்கி யிரண்
டாம் பாதி யைந்துடனே தன்னம் சத்துடனே
கூட்டாமல் மற்ற நாலு பூதத்துடனும் பூதத்திற்

சீகரண மென்று சொல்லப்படும். இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின தூல பூதங்களிலே ஆகாசத்திலே பரிசரூபரச கந்த மாகிய நான்கு குணமும் வியாப்பியமானபடியினால் அதிரிசியமாய்ப்போக நிசகுணமாகிய சப்தமும் வாயுவிலே ரூபரசகந்த மாகியமூன்றுகுணமும் வியாப்பியமானபடியினால் அதிரிசியமாய்ப்போகக் காரணகுணமாகிய சப்தமும் நிசகுணமாகிய பரிசமும் அக்கினியிலேரசகந்தமாகிய விரண்டுகுணமும் வியாப்பிய மானபடியினால் அதிரிசியமாய்ப்போகக் காரணகுணமாகிய சப்தப்பரிசமும் நிசகுணமாகிய ரூபமும் அப்புவிலே கந்தகுணம் வியாப்பியமானபடியினால் அதிரிசியமாய்போகக் காரணகுணமாகிய சப்தப்பரிசரூபமும் நிசகுணமாகிய ரசமும் பிருதுவியிலே சப்தப் பரிசரூபரசகந்தமுந் தோன்றின.

முன் சூட்சுமபூதத்திலிருந்து சூட்சும சரீரம் பிறந்தாற்போலப் பஞ்சீகரணம் பண்ணின தூலபூதத்தினின்று மாறுதத்துவமாய் நால்வகைப் பிறப்பாய் மூவகைச்சாதியா யிருக்கின்ற தூலசரீரங்கள் பிறந்தன.

இதிலாறுதத்துவமாவ தேதென்றால் சர்மம், உதிரம், மாமிசம், சனாயு, அத்தி, மச்சை இந்த ஆ
...ோணிப்பிக்கும். சமானன்வாயு ...



தேதென்றால் சராயுசம், அண்டசம், சுவேதசம், உற்பிச்சம் ஆகநாலு. மூன்றுசாதி யேதென்றால் இகலோக பரலோக புத்தி இருவகையுங் கொடுக்கின்ற மாநுடசரீரம் உத்தமசாதி, பரலோக புத்தியைமறைத்து இகலோகபுத்திமாத்திரம் அறிகின்ற பசுபட்சிமுதலானவை மத்திமசாதி, இரண்டுலோகத்துப்புத்தியையும்மறைத்திருக்கின்ற மரங்கொடி செடி அதன்மசாதி. இப்படிப் பிருதுவிதத்துவமாயிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற்போல அப்பு அக்கினி வாயு ஆகாசமென்னப்பட்ட தத்துவங்களினும் நிரைநிரையே பிதிர்லோகம் தெய்வலோகம் யட்சகந்தருவலோகம் சித்தர் லோகங்களினும் நட்சத்திரமாகத்தோற்றுகின்ற சந்திரன்முதலான பிதிர்க்கள் சூரியன்முதலான தேவதைகள் கந்தருவர் சித்தர் என்னப்பட்டதெல்லா முத்தமசரீரம். காமதேனு, அயிராவதம், அன்னம், கருடன்முதலாயின மத்திமசரீரம். கற்பகவிருட்சம், பாரிசாத முதலாயின அதன்மசரீரம்.

இந்தத்தூலசரீரமே அன்னமயகோசம். சூட்சுமசரீரம் மூன்றுகோசமா யிருக்கும். அதெங்ஙனென்னில் பிராணவாயுவுங் கன்மேந்திரியமுங்கூடிப் பிராணமயகோசம், மனதும் ஞானேந்திரியமுங்கூடி மனோமயகோசம், புத்தியும் ஞானேந்திரிய

ஆனந்தமயகோசம். இப்படிப்பஞ்சகோசஞ் சொல்லப்பட்டன.

ஆறுதத்துவமாயிருக்கின்ற தூலசரீரத்திலே சூட்சுமசரீர மிருக்கின்றதெப்படி யென்னில் கன்மேந்திரியமான வாக்கும் ஞானேந்திரியமான சிங்ஙுவையும் வாயிலிருக்கும். உதானவாயுவும் மனதுங் கண்டத்திலிருக்கும். பிராணவாயுவும் புத்தியும் இருதயத்தில்இருக்கும். சமானவாயுவுஞ்சித்தமும் நாபியிலிருக்கும். அபானவாயுவும் பாயுருவுங் குதத்தில் இருக்கும். வியானவாயுவும் ஞானேந்திரியமானதுவக்கும் அகங்காரமுஞ் சர்வாங்கமும்வியாபித்திருக்கும். உச்சியிலேதேயுசுங் கருவிழி நுனியிலேசட்சுயிந்திரியமும் காதுக்குள்ளேசுரோத்திர இந்திரியமும் மூக்குக்குள்ளே ஆக்கிராண இந்திரியமும் கழுத்துக்குமேற் றனித்தனியே யிருக்கும். கழுத்துக்குக்கீழே கைகால் குய்யத்திற்பாணிபாதம் உபத்தம் மூன்றும் தனித்தனியேயிருக்கும். இப்படித்தூலசரீரதத்துவம்-௬-ம், அதிற்குடிபுகுந்த சூட்சுமசரீரதத்துவம்-௨௰-ம், ஆகதத்துவம் - ௨௬-ம், பஞ்சபூதத்தின் காரியமானபடியினாலே ஒருமைப்பாடாகக் காரியசரீரமென்று சொல்லப்படும்.

காரணசரீரமும்சிதாபாசனும் சாக்கிரத்திலே இந்தஇருபத்தாறு தத்துவத்துடனே கலந்துநின்ற



ஞ் சொல்லப்படும். சொற்பனத்திலே தூலசரீரத்தைக்கைவிட்டு அந்தக்கரணத்துடனே கூடிநின்றபோது தைசதனென்றும் பிராதிபாதிக சீவனென்றும் சொற்பனகற்பிதனென்றுஞ் சொல்லப்படும். சுழுத்தியிலே காரியசரீர மிருபத்தாறையுங் கைவிட்டுக்காரணசரீரத்தைமாத்திரம் பொருந்தி யிருக்கும்போது பிராக்ஞனென்றும் பாரமார்த்திகசீவனென்றுஞ்சொல்லப்படும். பிரமசைதன்னியஞ்சாக்கிரத்துக்குச்சாட்சியா யிருக்கும்போது சீவாத்மாவென்றுஞ்சொற்பனத்துக்குச் சாட்சியா யிருக்கும்போது அந்தராத்மாவென்றுஞ் சுழுத்திக்குச்சாட்சியா யிருக்கும்போது பரமாத்மாவென்றும் அவத்தாத்திரயசாட்சியா யிருக்கும்போது ஞானாத்மாவென்றுங் கூடத்தனென்றுஞ் சொல்லப்படும். இப்படிச்சீவனுக்கு மூன்றுசரீரமும் மூன்றவத்தையுஞ்சொல்லப்பட்டது.

இனி ஈசுரனுக்கு மூன்றுசரீரமும் மூன்றவத்தையுஞ்சொல்லும்படி லோககற்பனையாகத் தோற்றுகின்ற தூலபஞ்சபூதங்களும் அதிற்றோன்றினமூன்றுசாதியா யிருக்கின்ற தூலசரீர சமட்டியுங்கூடி ஈசுர தூலசரீரமென்றும் விராட்டென்றுஞ்சொல்லப்படும். இதனுடனேகூடிச் சாக்கிராவத்தையைப்பொருந்தி யிருக்கின்ற வீசுரன் வைசுவானரனெ

யம் பிரமாவென்றுஞ் சொல்லப்படும். சூட்சமபூதங்களைந்தும் அதிற்றோன்றின சூட்சுமசரீர சமட்டியுங்கூடி ஈசுரசூட்சுமசரீரமென்றும் இரணியகர்ப்பனென்றும் சொல்லப்படும். இதனுடனேகூடிசொற்பனாவத்தையைப் பொருந்தியிருக்கின்ற வீசுரன் சூத்திராத்மாவென்றும் இந்த இருவகைக்கும் அதிஷ்டானசைதன்யம் விஷ்ணுவென்றுஞ் சொல்லப்படும். இந்தத்தூலசூட்சுமவிருவகைக்கும் வாசனையுடனே கூடினமாயை யீசுரகாரண சரீரமென்றும் அவ்வியாகிருதமென்றுஞ் சொல்லப்படும். இதனுடனேகூடிச் சுழுத்தியவத்தையைப் பொருந்தியிருக்கின்றவீசுரன் அந்தரியாமியென்றும் இந்த இருவகைக்கும் அதிட்டான சைதன்யம் உருத்திரனென்றுஞ்சொல்லப்படும். சீவன் தன்மூன்றவத்தையிலுந் தன்மூன்றுசரீரமாக இருக்கின்ற விருபத்தேழுதத்துவத்துடனும் நானென்று கலந்து நிற்கின்றாற்போல வீசுரனுந் தம்முடைய மூன்றுசரீரமாயிருக்கின்ற முப்பத்திரண்டு தத்துவத்துடனும் மூன்றவத்தையிலுங் கலந்துநிற்பர்.

ஆகையினால் சீவசிதாபாசன் தன்சரீரமாத்திரமேகலந்து நிற்பன். ஈசுரன் தம்முடைய சரீரமாகிய சகலசரீரங்களோடுஞ் சகலபிரபஞ்சங்களோடுங் கலந்து நிற்பர். இந்தவிருவகைக்குஞ் சாட்சியாயி



லபிரபஞ்சத்திலும் நிறைந்து அப்பாலும் பத்துத்திக்கையும் அதிக்கிரமித்து எல்லையற்றிருக்கும்.

சீவனுக்குத் தூலசரீரவியவகாரத்துக்கு அன்னமயமான சட்கோசதத்துவம்-சு, சூட்சுமசரீரதத்துவம்-உ0, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-ரு, ஆகதத்துவம்-ஙக, சூட்சுமசரீர வியவகாரத்துக்குசூட்சுமசரீரதத்துவம்-உ0, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-ரு, ஆகத்தத்துவம்-உரு, காரணசரீரவியவகாரத்துக்குசீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம் ஆக-ரு, சீவவியவகாரத்துக்கு சீவன், ஈசுரன், பிரமம்ஆக-ங, சாட்சி வியவகாரத்துக்குசாட்சி-க, ஈசுரனுக்குத் தூலசரீர வியவகாரத்துக்குச் சமட்டி அன்னமயகோச தத்துவம்-சு, சமட்டி சூட்சுமசரீரதத்துவம்-உ0, சமட்டி, சீவன் அவித்தை-உ, ஈசுரன், வித்தை, பிரமம்-ங, பூதம்-ரு, ஆசத்தத்துவம்-ஙசு, சூட்சுமசரீர வியவகாரத்துக்குச்சமட்டி சூட்சுமசரீரதத்துவம்-உ0, சமட்டி சீவன் அவித்தை-உ, சூட்சுமபூதம்-ரு, ஈசுரன், வித்தை, பிரமம்-ங, ஆகத்தத்துவம்-ங0, காரணசரீர வியவகாரத்துக்கு, ஈசுரன், வித்தை, பிரமம்-ங, ஈசுரவியவகாரத்துக்கு ஈசுரன் பிரமம்-உ, பிரமவியவகாரத்துக்கு பிரமம்-க, இந்திரியவியவகாரத்துக்கு இந்திரியம்க-சட்கோசதத்துவம்-சு, கரணம்-ரு, வாயு-ரு, சீவன்,

வவாதக்கட்டளை.



வம்-௨௨, மனோராச்சிய வியவகாரத்துக்குக்கரணம் ௫, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-௫, ஆகத்தத்துவம் - ௧௦, இப்படித் தத்துவங்களினுடைய தோற்றமும் நிலையுஞ்சொல்லப்பட்டன.

இனித் தத்துவமொடுங்குகின்றவழி சொல்லுகிறோம். அதெங்ஙன மென்னில் சகல சீவர்களிடத்திலே இருக்கின்றதூலசரீரங்களும் தனக்காதாரமான தூலபூதங்களுடனேமடிந்து பூதமாத்திரமாக ஒடுங்கும். இந்தத்தூலபூதங்களும் பஞ்சீகரணம் விட்டுத் தன்மாத்திரையான தாமதகுணபூதங்களாகமிஞ்சும். அப்போது கேவல விரணிய சர்ப்பாவத்தையென்று சொல்லப்படும். சூட்சுமசரீரம் இருபதுதத்துவமுங் கட்டுவிட்டுப் பூதங்களினுடையசாத்வீககுணமும் இராசத குணமுமாக வொடுங்கும் அதெங்ஙனென்னில் சகல பிராணிகளிடத்திலு மிருக்கின்ற அகங்காரமும் ஆக்கிராணமும் உதானவாயுவுமுபத்த விந்திரியமும் பிருதுவியி லொடுங்கும். சித்தமும் சிங்ஙுவையும் சமானனும் பாயுருவும் அப்புவிலொடுங்கும். புத்தியும் சட்சுவும் அபானனும் பாதமும் அக்கினியிலொடுங்கும். மனதும் துவக்கும் பிராணனும் பாணியும் வாயுவிலொடுங்கும். தேயுசும் சுரோத்திரமும் வியானனும் வாக்கும் ஆகாசத்தி லொடுங்கும். அப்போது பழையபடி



களும்பிருதுவி அப்புவிற்கரைந்தொடுங்கும். அப்புவும் அக்கினியிற்சுவறியொடுங்கும். விளக்குப்போல அக்கினியும் வாயுவிலணைந்தொடுங்கும். வாயுவும் ஆகாசத்தி லோய்ந்தொடுங்கும். ஆகாசமும்விட்சேபசத்தியிலொடுங்கும். ஆவரணசத்தியும் விட்சேபசத்தியும் மூலப்பிரகிருதியின் தாமதகுணமாத்திரமாய் ஆலமரம் ஆலவிரையி லொடுங்கினாற்போல இன்னம்ஒருசிருட்டிக்கு வித்தாக மாயையிலும் *அந்தமாயையும் அவித்தையும் அவித்தையிலும் ஒடுங்கும்.* அதி னுண்மையான மூலப்பிரகிருதி யென்றுசொல்லப்பட்ட விந்து தத்துவத்திலொடுங்கும். அந்த விந்துவும் பாம்பென்கிறபெயர்போய்ப் பழுதையாய்க் கண்டாற்போலத் தனக்கதிட்டானசைதன்யமான பிரமசைதன்யமாத்திரமாக வொடுங்கும். இப்படிப் பொய்யெல்லாம் மெய்ப்பொருளொன்றாகக்கண்டு அதுவே சுபாவசித்தமாய் நிசமாகவிருக்கின்ற தன்வடிவெனக்கண்டுதெளிந்து கவலைகெட்டிருக்கின்றவனே சீவன்முத்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.

இப்படித்தோற்றி யொடுங்குகின்ற தத்துவம் ௫௬, அதெங்ஙனென்னில்பூதம்-௫, தூலசரீரதத்துவம்-௬, சூட்சுமசரீரதத்துவம்-௨௦, காரணசரீரமா

ஈசுரன்-௨, இதற்கெல்லாம் அதிட்டானசைதன்யமா
யிருக்கின்ற பிரமம்-௧, ஆகத்தத்துவம்-௩௬.

இதிற்சீவருக்குச் சமுதாயம். பூதம்-௫-மாயை
௧-மாயாப்பிரதிவிம்பரான ஈசுரன்-௧-பிரமம்-௧-ஆக
இந்த எட்டுஞ்சகலபிராணிகளுக்குஞ் சமுதாயமாக
வனுபவிக்கப்படும். மற்ற விருபத்தெட்டும் அவன
வனுக்குப் பிறத்தக்காக வனுபவிக்கப்படும். அதெ
ங்ஙனென்னில் பிருதுவிதத்துவம் ஒன்று இறக்கில்
எல்லாருக்கும் ஆதாரமில்லை. மழைமறுக்கில் எல்லா
ருக்குஞ்சலமில்லை. தேயுவில்லாதிருந்தால் பாகமில்
லை. வாடை-தென்றல் இல்லாவிட்டால் வாயுவியக்க
மில்லை. ஆகாசமிறக்கில்ஒருவருக்கும் அவகாசமில்
லை. மாயையும் மாயாப்பிரதிவிம்பருமிறக்கிற் சகலச
மயத்துக்குந் தெய்வமில்லை. பிரமமில்லையோ ஒருத்
தருக்குமறிவில்லை. ஆகையால் இந்தஎட்டும் எல்லா
ருக்குஞ் சமுதாயம். பிறத்தக்கெங்ஙனென்னில் ஒரு
த்தனுக்குத் தூலசரீரமிறக்கில் எல்லாருக்குந் தூ
லசரீரம்இறவாதபடியினாலும் சூட்சுமசரீரத்திலொ
ருவனுக்கு அங்கவைகுல்லியம் வந்தால் எல்லாருக்
கும் வாராதபடியினாலும் முத்தராயிருக்கின்ற சுக
ர் வாமதேவர் முதலானபேருக்கு அவித்தையுஞ்சீ
வனு மிறந்துபோயிருக்க மற்றபேருக்கெல்லாம் அ



பத்தெட்டுத் தத்துவமும் அவனவனுக்கு பிறத்த
க்கென்கின்றதிலே சந்தேகந்தேவையில்லை.

இந்தத்தத்துவம் முப்பத்தாறில் எப்போதுந்
தானாகவே காணப்பட்டதத்துவம்-௧, எப்போதுந்
தனக்கு அன்னியமாகவே காணப்பட்ட தத்துவம்
௭, எப்போதுந்தானாகவுந் தனக்குஅன்னியமாகவு
ம் அனுபவிக்கப்பட்ட தத்துவம்-௨௮, அதெங்ங
னென்னில் அவத்தாத்திரய சாட்சியா யிருக்கின்ற
பிரமசைதன்னியம் எல்லாவவத்தையிலும் தானாக
வேவிளங்குகையினாலும் மற்றதத்துவங்கள் போல
த்தனக்கு அந்நியமாகக் காணப்படாதபடியினாலும்
பிரமசைதன்ய மொன்றுமே தானாகவிருக்கப்பட்ட
து. பஞ்சபூதம்மாயை மாயாப்பிரதிவிம்பர் ஆகஏழு
ம் தன்றொழிலான வெட்டுக்கொத்துழவு பஞ்சகி
ருத்தியம் தசாவதார முதலானதொழில்களொருக்
காலுந் தன்னுடைய தொழிலாகக் காணப்படாதப
டியினாலும் இந்தஏழுதத்துவமுந் தனக்கு அன்னி
யமேயல்லாமல் தானாகமாட்டாது. மற்றஇருபத்தெ
ட்டுதத்துவமும் நான் பிராமணன் நான் க்ஷத்திரிய
ன் நான்வைசியன் நான்சூத்திரன் நான்பிரமச்சாரி
நான்கிருகஸ்தன் நான்வானப்பிரஸ்தன் நான்சந்நி
யாசி நான்ஆண்பெண் கறுவல் சிவலை கட்டையன்
நெட்டையன் நான்பருத்தேன்

தானாகவழங்குகின்ற தூலசரீரம் ஆறுதத்துவமும் மற்றொருவேளையிலே தனக்குப் புறம்புபட்டு என்மாடென்கன் றென்றாற்போல என்சரீரம் பருத்தது இளைத்தது நரைத்தது என்சரீரம்பிறந்து இத்தனைநாள் ஆயிற்றென்று தான் வேறு தூலசரீரம் வேறாக வழங்குகின்றபடியினாலும் நான்கண்டேன் கேட்டேன் தொட்டேன் போகித்தேன் கொடுத்தேன் வாங்கினேன் நடந்தேன் புசித்தேன் சிந்தித்தேன் நிச்சயித்தேன் இந்தப்பஞ்சத்துக்குச் சிவித்தேனென்று தானாகவழங்குகின்ற சூட்சுமசரீரதத்துவம் இருபதும் மற்றொருவேளையிலே தனக்குப்புறம்புபட்டு என்வீடென்னுடைமை யென்றாற்போல என்கண்ணென்காதென்மூக்கென்னாக்கென்கை யென்காலென்மன மென்புத்தி யென்னகங்காரமென்சித்த மென்பிராணனென்று தான்வேறு அவைகள்வேறாகவழங்குகின்றபடியினாலும் நானறிவேனறியேனென்று தானாக வழங்குகின்ற வஞ்ஞானமுஞ்சிதாபாசனு மற்றொருவேளையிலே தனக்குப்புறம்புபட்டு என்னஞ்ஞானம்என்சீவனென்றுவழங்குகின்ற படியினாலும் இந்த இருபத்தெட்டுதத்துவமுந் தானாகவுந்தனக்கன்னியமாகவும் வழங்குகின்றது சித்தம். இப்படிச்சொன்ன குருவைப்பார்த்து சிஷ்யன்கேட்கும்படி இந்த இருபத்தெட்டுத



யாகத் தோற்றவேண்டுமே யல்லாமற் பஞ்சபூதத்தைப்போலத் தனக்கன்னியமாகக்காணக்கணக்கில்லை. இந்தஇருபத்தெட்டுந் தனக்கன்னியமேயானாலெப்போதும்புறம்புபட்டேயிருக்கவேண்டுமல்லாமல் தானாகவழங்கக்கணக்கில்லை. தானுமாய்த் தனக்குஅன்னியமுமா யிருக்குமென்கின்றது இருட்டாதித்தனென்றாற்போலவும் வெள்ளாள தீட்சதனென்றாற்போலவுஞ் சொன்னீர். இதுவிருத்தமென்கின்ற சங்கைக்கு பரமார்த்தமாகத் தானென்கின்றதொருவகையும் அத்தியாசத்தினாலே தானென்கின்றதொருவகையும் ஆக இருவகையுமுண்டு. சாட்சிசைதன்னியத்தைத் தானென்கின்றது பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல. தனக்கன்னியமாயிருக்கின்றவிந்த விருபத்தெட்டையுந் தானென்கின்றது கட்டையைக் கள்ளனென்றாற்போலவும் பழுதையைப்பாம்பென்றாற் போலவும் புத்திர தாராதிகளைத் தானென்றாற்போலவும் மயக்கமேயல்லாமல் உண்மையல்ல. ஆகையினால் அஞ்ஞானகாலந் தொடங்கித் தானல்லவென்று காணப்பட்ட தத்துவம்-௭- இப்போது இப்படிக்கொத்த விவேகம்பண்ணினபிற்பாடு தானல்லவென்று காணப்பட்ட தத்துவம்-௨௮, ஆக இந்த முப்பத்தைந்து தத்துவங்களையும் அதற்குச்சொன்ன குணங்குறிகளுடனே கூடக்காண்கின்ற அறிவு [illegible]

திற்குப் புறம்பாகவே இருந்து கடத்தைப் பார்க்கி
ன்றதுபோல இந்த முப்பத்தைந்தையுங் காண்கின்
றபேரறிவு முப்பத்தாறுந் தத்துவமாகிய அதுதா
னென்றறிந்து அதுதானே பரமசிவனென்று தெ
ளிந்தவனே சிவதரிசனமுடைய சீவன்முத்தனெ
ன்று சொல்லப்படுமென்றுத்தரம்.

இப்படிப் பிரமமேதானென்றும் மற்ற முப்ப
த்தைந்து தத்துவமுந் தனக் கன்னியமென்றும் பி
றித்தறியாத அவிவேகிகள் அகங்காரக் கிரந்தியி
னாலே புத்திரதாராதிகள் தவிக்கின்றதைத் தான்த
விக்கின்றேனென்கின்ற மூடகரம்போல விந்தஇரு
பத்தெட்டினுடைய தொழிலையுந் தன்றொழிலென்
றுமயங்குகின்ற படியினால் இந்த இருபத்தெட்டினாலு
ம் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினாலுங் க
ட்டுப்பட்டு அந்தக் கன்மத்தின்படியே சனனமர
ணாதிசமுசாரத்திலே அடிபடுகிறோமென்று மயங்
குவன். பிரமசைதன்னியமே தானென்றும் மற்றமு
ப்பத்தைந்துந் தானல்லவென்றுந் தெளிந்த விவே
கிக்கு அகங்காரக்கிரந்தி யற்றபடியினால் இந்த விரு
பத்தெட்டினுடைய தொழிலையும் நான்செய்யவில்
லையென்றும் இந்தவிருபத்தெட்டும் புசிக்கின்றதை
நான்புசிக்கவில்லை யென்றுந் திடப்பட்டுத்தேறி மய
க்கமற்றிருக்கின்ற படியினால் இந்த விருபத்தெட்டி



னாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்களினின்
றும் விடுபட்டுக் கன்மமில்லாதபடியினால் சனனம
ரணாதி சமுசாரமில்லாமல் முத்தனாகிப் பிரமமாத்
திரமாகவே யிருப்பன். இவனைச்சீவன்முத்தனென்
றுந் திடப்பிரக்ஞனென்றும் அதிவர்ணாச்சிரமியெ
ன்றுங் குணாதீதனென்றும் பகவத் பத்தனென்றும்
பிராமணனென்றும் சொல்லுகின்ற இந்த வாறையு
ஞ் சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. சகலரும் இந்
தத்தத்துவத்தை விசாரம்பண்ணி மோட்ச மடை
யக்கடவர்கள்.

நானாசிவவாதக்கட்டளை

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

சர்வஞ்சின்மயம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ-திருவேங்கடநாதனுர் அருளிச்செய்த

# ஸ்ரீ தாசாரத்தாலாட்டு.

இஃது

சமிவனக்ஷேத்திரமென்னுங்கோயிலூர்

ஸ்ரீ-முத்துராமலிங்க சுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்

மாணுக்கர்களிலொருவராகிய

அ - இராமசுவாமிகளால்

கோயிலூர் ஏட்டுப்பிரதிப்படி

பரிசோதித்து

சென்னை:

மிமோரியல்அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

வியஹு சித்திரைமீ

உ

கணபதிதுணை.

ஸ்ரீகிருஷ்ணயபரப்பிர்மணேநம:

# கீதாசாரத்தாலாட்டுப்பிரபந்தம்.

காப்பு.

ஐவகைப்பொருளுநான்கு கரணமுங்குணங்கண்மூன்றுஞ், செய்வினையிரண்டுமொன்றி யாவருந்திகைப்பகின்ற, பொய்யிருளகலஞானப் பொருட்கதிர்விரித்தபுத்தேள், கைவளராழிச்செங்கட் கண்ணனைக்கருத்துள்வைப்பாம்.

ஆக்கியோன்பெயர்-நூல்வந்தவழி
நூற்பெயர்-நூற்பயன்.

வெண்பா.

மாதையர்கோன்வேத நவில்வாய்வேங்கடநாதன்
காதையுறப்பார்த்தனுக்குக் கண்ணனருள்-கீதைக்
கருத்துயர்தாலாட்டாகக் கட்டுரைத்தான்யாருங்
கருத்துயர்தீர்ந்தெய்தக் கதி.

(நூல்.)

சீராரும்பரமார்த்ததெரிசனத்தையருள்செய்யப்,
பேராருந்தேசிகனாய்ப் பெருமானேவந்தவரோ. ()

திருத்தேரிற் சாரதியாய்ச் சேர்ந்திருந்துங் கீதையினா, லருச்சுனற்குமெய்ஞ்ஞான மனைத்துபு-

சாரதியாய்த் தேர்செலுத்தித் தனஞ்சயனீதா
னையினைப், பாரோனைப்பார்த்தேவிசயன் பயந்துமலர்
த்தாள்வணங்கி. (௩)

அமர்க்குவந்தசுற்றத்தா ரனைவரையுங் கொல்
வதினு, லெமக்கழியாச் சோகம்விளைந் தெய்துமெ
னவேவினவ. (௪)

செஞ்சமரிற் பந்துசனஞ் சேதம்வருமென்றி
ரங்கி, யஞ்சினபார்த்தன் பயமாங் ககற்றவருளா
னோக்கி. (௫)

சுற்றமறிற் சோகமெனச் சொல்லினைசற்றறிந்
தவன்போற், கற்றுணர்ந்தபேரதனாற் கலங்கார்கா
ணென்றவரோ. (௬)

கலங்காரோ விறப்புவரிற் கற்றுணர்ந்தபேரே
னு, மலங்காமனுனிருக்கும் வகையுரையு மெனவி
னவ. (௭)

நீயுநானும்புவிமே லிருபர்களுமெய்யுணர்வா,
லாயுங்காற்பிறந்திறப்ப தார்க்குமில்லையென்றவரோ.

ஈங்கெவர்க்கும்பிறந்திறப்ப தில்லையென்றீ ரிவ்
வுலகி, னீங்குபவம்யார்க்கிதனை நிச்சயமாய்ச்சொல்
லுமென. (௯)

இத்தரையிற்பிறந்திறப்ப தெடுத்தவுடற்கடுத்
தபொறி, நித்தியமாகியவான்மா நின்சொருபமெ
(௰)



அங்கமுயிரிந்தியநா னன்றிவேறெனைக்காணே,
னிங்குயான்வேறுண்டே லெனக்கறியப் புகலுமெ
ன. (௧௧)

மெய்யுயிரிந்தி யங்களல்லால் வேறறியேனெ
ன்றவனைப், பையவவையாலறியப் படானுநீயென்
றவரோ. (௧௨)

தேகம்வேறாகிலதைச் சேர்ந்ததிவணேதென
வே, சோகமேவிளைகருமத் தொடர்ச்சியினாலென்ற
வரோ. (௧௩)

தேகமெடாமுன்கருமச் செயல்வருமாறேதெ
னவே, யேகமாமரமும்வித்து மெனுமுறைபோலெ
ன்றவரோ. (௧௪)

காயமுந்தானும்பிறிதேற் கன்மமெவர் செய்த
தெனத், தீயவுடற்கலதுகன்மச் செயறனக்கேதெ
ன்றவரோ. (௧௫)

படர்கருமமுடல்செய்யிற் பலமுறுவதார்க்கெ
னவே, யடர்பலமுமுடற்கேயா மறிவார்க்கேதென்
றவரோ. (௧௬)

வெய்யவினையுடற்சென்றுன் மெய்யிங்கேவிழு
வான்மா, வையமறநரகசொற்க மனுபவிப்ப தே
தெனவே. (௧௭)

அனுபவமேயில்லையதுவீ ணாரோபிதநிகழ்த்திற்
றனுகரணச்செயறனதாய்ச் சார்வதுபோ லென்ற
வரோ.

மற்றுடலின்செய்கைதன்மேல் வருமயக்கமே தெனவே, முற்றுணர்வொன்றில்லாத மோகமென் றுசொன்னவரோ. (ககூ)

அறிவுதேகந் தனக்கோ வான்மாவிற்கோவெ னவே, பிறிவுசெய்யிலசித்துடலம் பிரமமறிவென் றவரோ. (உ0)

தேகமசித்தாகிலிந்தச் செயல்வருவதேதென வே, யேகபரஞ்சோதியின்முன் னிருக்கையினாலெ ன்றவரோ. (உக)

இருக்கினுமசேதனத்துக் கிச்செயலுண்டோ வெனவே, யுருக்குபடாக்காந்தமுன்னி லூசிகிகளொ ன்றவரோ. (உஉ)

சொன்னசெயலுடற்கானாற் சுகதுக்கமார்க்கெ னவே, யன்னசுகதுக்கமுந்தா னவ்வுடற்கேயென் றவரோ. (உந)

சேதனமா மான்மாவைச் சேராத துக்கசுக, மோதுசடமாமுடலை யுற்றிடுமோசொல்லுமென.

பூதமைந்தோடைந்துயிர்கள் புலன்கள்பத்து மனமுதனான், கீதிருமெய்யிதின்மனத்துக் கின்பது ன்பமென்றவரோ. (உரு)

இந்தவிருவகைத்தனுவிற்கேதுவேதெனவினவ முந்தியகாரணமதனான் மூன்றுதனுவென்றவரோ.

மனமறியுந்துக்கசுக வரவென்றீ ரம்மனமும், வினவிலசே தனமலவோ விரித்தெனக்கு விளம்பு (உஎ)



அம்மனத்திலான்மா வபேதம்போற்றோன்று தலால், விம்முதுக்க சுகத்தைமன மேவுமென்று சொன்னவரோ. (உஅ)

அந்தமனதுக்கசுக மதனிடத்தினில்லாமல், வ ந்திலங்குமான்மாவைமருவியதென் சொல்லுமென.

வெய்யகனலின்சூடுமேல் வைத்தசட்டியினா, டுய்யபுன லூடுவந்தங் கொன்றுதல்போ லென்ற வரோ. (ந0)

சித்தாகுமான்மாவுஞ் செடமாகுஞ் சித்தமுந் தா, னெத்தாங்கிரண்டுமொன்று யுற்றவகைசாற்று மென. (நக)

வல்லிரும்புகனலுடனே மருவியதுபோன்மன மு, மொல்லையிலான்மாவுடனே யுற்றதுகாணென் றவரோ. (நஉ)

உற்றதெதனாலெனவே யுள்ளமவிவேகமுறப், பற்றியதன்மேலுமதன் பண்புவந்ததென்றவரோ.

அடுத்தகுணம்போமோபின் னான்மாவைவிட் டெனவே, யெடுத்தசெம்பூநிறம்படிகத் தேறுதல் போலென்றவரோ. (நச)

சுத்தபடிகம்போற் சொரூபமாய்த் தானிருக்க, மெத்தவு மாசாமலினம் மேவியதென் சொல்லு மென. (நரு)

அநாதியாம்வாசனையா லடைந்ததாசாமலின, மனோபந்த மிருக்கின்முத்தி வாராதென் றுரைத்த வரோ. (௩௬)

பந்தமெதுமுத்தியெது பகுத்துரைக்க வேண் டுமென்றன், சிந்தைதெளியவென்று திருத்தாளி னைவணங்க. (௩௭)

தேகாதிதானெனவே சேரபிமானங்கள்பந்த, மாகாதமானம்விடி லரியமுத்தியென்றவரோ. ()

அபிமானம் வரும்வகையு மாங்கதனைத் தீர்வ கையுந், தவியாமனுனறியத் தயவாகக்கூறுமென.()

மறந்திடு மஞ்ஞானத்தான் மானம்வந்த தஞ் ஞான, மிறந்துவிடின்மானமும்போ மென்னவுரை செய்தவரோ. (௪0)

அந்தமுறையஞ்ஞான மணுகுவதும்போவது வுஞ், சந்தயமிலாதறியத் தயவாகக்கூறுமென. ()

அஞ்ஞானம் வந்த தனுதியது சொல்வதல்ல, மெய்ஞ்ஞானத்தாலேவிடுமென் றுரைத்தவரோ. ()

இரவியெதிரடுத்துவந்த விருட்போலவஞ்ஞா னம், வரவிதியோசோதிதன்பால் வந்தவகை யே தெனவே. (௪௩)

அந்தவறிவுவந்தா லஞ்ஞான மில்லையப்பாற், [illegible]மானந்த சாகரங்கா[illegible]



வேதாந்தத்தாற்குருவான் மெய்ஞ்ஞானம்வந் தவுடன், நீதானதுக்கசுகந் தீராததேதெனவே. ()

பற்றறுமோ துக்கசுகம் பரோட்ச ஞானத்தா லே, யற்றமாமவ்விரண்டு மபரோட்சத் தென்ற வரோ. (௪௬)

பரோட்சமபரோட்சமெது பகுத்துரைக்கவே ண்டுமென்றன், நிரோதமாம் புத்திநன்றாய்த் தெ ளியும்படிக்கெனவே. (௪௭)

பகர்ந்தசத்தஞானம் பரோட்ச மனுபவத்தா, லகம்பிரமமெனு ஞானமபரோட்சமென்றவரோ.()

தான்பிரமமென்றறிந்துந் தனுவைத் தானெ ன்றபுத்தி, யேன்போகவில்லையதை யெனக்கறியப் புகலுமென. (௪௯)

கேழ்வியினன்மனனத்தாற் கிளர்ந்தயோகங்க ளினு, லாழ்பிரமத்தனுபவம்வந் ததுதீருமென்ற வரோ. (௫0)

ஆதியாஞ்சிற்சொருப மாகாததா னினிமேற், சோதிமனாதியினுற்சொருபமாமோவெனவே.()

எப்போதுஞ்சின்மயந்தா னெனன்மறந்துதே டுவது, செப்புமிடற்றணியிருக்கத் தேடுதல்போ லென்றவரோ. (௫௨)

தேடியபின்றேகபுத்தி தீர்ந்துபோய்ச் சிற்சொ ருபங், கூடுவனோயானென் குறைதீரச் சொல்லு

வந்தவுடல்வேறாயும் வாசனையாற்றானெனலாற், சந்தயமென்றன் சொருபந் தானாதற் கென்றவரோ. (௫௪)

தனுவைத்தானெனும்பிரமை சத்தஞானத்திலறா, தனுபவமெய்ஞ்ஞானத்தா லறும்வகையேதுரையுமென. (௫௫)

விளக்குவிளக் கெனுமதனால் வெய்யவிருள் போய்விடுமோ, துளக்கமிலாவிளக்கேற்றிற் றொலையுமிருளென்றவரோ. (௫௬)

நெடுங்காலமான்மாவை நீங்காதவஞ்ஞானம், விடுங்காலமெங்ஙனோ மெய்ஞ்ஞானத்தாலெனவே.

அந்தகாரங்குகையி லாயிரநாளிருந்தாலுஞ், செந்தீபங்கண்டவுடன் றீர்வதுபோலென்றவரோ.

கருமயோகந்தவமே காரணமாய்நீங்காம, லருமையாய் ஞானம்வந்தோ வஞ்ஞானம் போமெனவே. (௫௯)

குத்துவெட்டும்படைகளினாற் கூடுமோவிருடுரக்க, வுத்தமமாம்ரவியுதித்தாலோடுமிருளென்றவரோ. (௬௦)

அஞ்ஞானவிருடுரக்க வறியாதநல்லகன்ம, மெய்ஞ்ஞானந்தனைப்பரிக்கும்விதமெவ்வாறெனவினவ.

கருமமிருவகையாங் காமியநிட்காமியமென்,
... ன்றவரோ. ( )



கருமமேகாரணமாய்க்கட்டுரைத்தீரிவ்வுலகை, யொருவும்வகையையெமக்கோதென்றடிபணிய.()

இந்திரசாலம்போலவிவ்வுலகைநம்மிடத்திற், றந்திரமாய்த் தோற்றுவித்தோஞ் சத்தியமலவென்றவரோ. (௬௪)

மித்தையெனுஞ் சகத்துநின்பால் விளங்குமோவெனவினவச், சுத்திதனிலேரசிதந் தோன்றுதல்போலென்றவரோ. (௬௫)

அயல்வெள்ளிசுத்தியின்மேலாரோபிதங்கூடு, மியலுள்ளசகமுமுன்வே றிருந்ததுமுண்டோவெனவே. (௬௬)

மனமயக்கம்பிடிக்கிலில்லா வத்துவுந்தோன்றிடுமதுவோ, கனவில்விண்ணிற்றான்பறக்கக் கண்டதுபோலென்றவரோ. (௬௭)

கனவுபோற்பிரபஞ்சமென்றீர்கண்விழித்தாற் கனவுபொய்யாம், வினவுசகந்தினமுமெய்யாய் விளங்குவதென்சொல்லுமென. (௬௮)

மெய்யாகவிளங்குவதுமெய்ஞ்ஞானம்வருமளவும், பொய்யாம்பின்கனவதுபோற் போதம்வரிலென்றவரோ. (௬௯)

முன்புகண்டகனவுபொய்யா முழிசாக்கிரம் போலவென்றீர், பின்புமுத்திதிசையடைந்தும் பிரபஞ்சமிற்புகேதெனவே

தெரிந்தவர்க்குத்தோற்றுவது தெத்தபடம் போல்வதல்லாற், பரந்தசகங்காரியத்திற் பயன்படாதென்றவரோ. (எக)

கன்மவினையஞ்ஞானங் கடந்துமதன்காரியமாம், புன்மையுறுமெய்யுடனேபோகாததேதெனவே.

வெட்டவிழுமரம்பசந்து விளங்குதல்போற்சிலகால, நட்டகன்மமாய்ந்துமங்கநடித்திடுங்காணென்றவரோ. (எங)

சென்மம்போய்முத்தியினைச் சேரச்சிலரிருக்கத், தொன்மையான்மாப்பலவோ சொரூபம்பகருமென. (எச)

பிரமமென்றுமீசனென்றும்பெருகுபலசீவனென்று, முறைமயக்கமலதான்மா வொருவனேயென்றவரோ. (எரு)

ஏகந்தானான்மா வெனும்வகையேமெய்யானால், லாகந்தோறும்பலவா யமர்ந்ததென்னேசொல்லுமென. (எசா)

பலகடத்திற்சலத்தூடு பானுவிம்பந்தோன்றுதல்போற், றெலைவில்புத்திதொறுமான்மாத் தோன்றுதல்காணென்றவரோ. (எஎ)

ஆதித்தன்போலான்மா வளவில்புத்திதொறுந்தோன்றிற், சாதிக்குமுத்தியெவர்தனக்ககனைச்சா



பந்தமுத்திதானுமந்தப் பரந்தபுத்திதனக்கேயா, மந்தவிம்பந்தனக்கில்லையென் றறிவுவரச்சொன்னவரோ. (எகூ)

பரமேகமாயுமதிற் பலசீவனேதெனவே, யொருகடலிற்பலகுமிழி யுதிப்பதுபோலென்றவரோ()

சீவனதுதானென்றுஞ் சேரும்பிரமமென்று, மாவதுவோபேரின்ப மாங்கதெனக்கோதுமென()

ஏகம்பிரம மிரண்டிலைநீவேறுமல, சோகமுறும்பேதமறிற் றேன்றுமின்பமென்றவரோ. (அஉ)

சீவபேதம்போமோசித் தொன்றுமோவெனவே, யாவன்மனமறுஞ்சுழுத்தி யவத்தையிற்பாரென்றவரோ. (அங)

பேதமலவிவ்வுலகம் பிரமமயமென்றறிந்தும், பூதமயமாய்த்தோற்றல் போகாததேதெனவே. ()

கானலைநீரென்றோடிக் கண்டவர்க்குத்தீர்ந்தபின்னும், வானுலவுநீராகி வயங்குதல்போலென்றவரோ. (அரு)

அறிவானுநல்லறிவு மறியப்படும்பொருளும், பிறிவாய்மூன்றாயிருத்தல் பேதமலவோவெனவே.

சொற்பனத்திற்றனித்தொருவன்றோற்றம்வேறில்லையங்கே, கற்பனையாம்பொருளறிவு காண்பவன்போலென்றவரோ. (அஎ)

அரியமாம்யோகத்தாற்றாயமனம்லயமாறு, லரியமூவகைவிகற்ப மழியுமென்றுசொன்னவரோ. ()

சிறந்திருக்குமான்மாவுஞ் செகமெல்லாநிறைந்திருந்து, மறைந்தெனக்குத்தோன்றாத வகையேதுசொல்லுமென. (௯0)

சத்துச்சித்தானந்தந் தான்மூன்றுமதனுடனே, யொத்துற்றுநாமவுருவஞ்சகமாகி. (௯க)

இருக்கையினிற்றோன்றுதிதுமூன்றும்பிரமமென, மரிக்கில்வரும்பின்னிரண்டு மறிசகமென்றுரைத்தவரோ. (௯உ)

அறிந்துகொள்ஞானத்தாலே யான்மாவையென்றுரைத்தீர், சிறந்தொளிருமான்மாவுந் திரிசியமாமோவெனவே. (௯ங)

முந்தியஞானத்தாலே முதிருமஞ்ஞானந்துறக்கிற், சிந்தையிலான்மாச்சுயமாய்த் திகழுமென்றுசொன்னவரோ. (௯ச)

இனியமுத்திச்சுகமிருப்ப தெப்படியென்றேவினவ, வனுபவத்திலறிவிடையா னந்தம்போலென்றவரோ. (௯ரு)

மனலயம்வந்தவரலதுமற்றிலரோமுத்தரெனச், சனகனைப்போற்சீவன்முத்தர் தாமுமுளரென்றவரோ. (௯சு)

சீவன்முத்தியடைந்தோர்கள் செயலுமவர்தங்குணமும், நாவுரைக்கும்வாசகமும் நானறியச்சொ (௯எ)



வருங்கருவு பிறப்பினொடு வளர்தல்பருத்தல்குறைதல், லொருங்கலுமெய்க்கென்றதனை யொறுத்திருப்பானென்றவரோ. (௯அ)

பார்ப்பதினுங்கேட்பதினும் பகர்வதினுஞ்செல்வதினு, மேற்பதினுங்கரணதன்ம மெனத்தவிர்ந்தானென்றவரோ. (௯௯)

பசிதாகமுயிர்க்கெனவே பயந்துக்கஞ்சுகங்காமம், வசிகோபமதிக்கெனவே மகிழ்ந்திருப்பானென்றவரோ. (க00)

வீடுந்தாரமுமுறவு மேவியென்றுமிருந்தாலு, நீடுந்தாமரையிலைநீர் நிகரொப்பானென்றவரோ. ()

பற்றிடுங்காயமுந்தானும் பன்றுளொன்றாயினும்பி, னுற்றபுளியம்பழமோடு மொப்பானென்றவரோ. (க0உ)

கூறுமுலகியற்கையுடன் கூடினுமெய்ஞ்ஞானம்வந்தோர், சேறும்பிள்ளைப்பூச்சியும்போற் றிரிவார்காணென்றவரோ. (க0ங)

ததியூடுகடைந்தவெண்ணெய் தான்மோரிற்கிடப்பதுபோல், மதியோடுகூடினும்பின் மயங்கார்காணென்றவரோ. (க0ச)

அருச்சுனன்றன்பொருட்டாக வனைவருக்கும் ஞானம்வரப், பொருந்தியதேசிகவடிவாம் புண்ணியரேதண்வளர்... (க0ரு)

ஆயர்குலமாதரளவிலோரைப்புணர்ந்துந், தூயபதினாறாயிரவருடந் தோய்ந்திருந்தும். (க௦சு)

பரமமுனிவர்முன்னே பரிச்சித்தைத்தீண்டியன்று, பிரமசரியஞ்செலுத்தும் பேரொளியே கண்வளரீர். (க௦எ)

வெண்பா.

ஆதிமூலம்விசயற் காதிமறையின்பொருளை, போதியுணர்த்துகின்றவுண்மையிதைக்-காதலுற்றுக், கற்றோருங்கேட்டோருங்காசினியில்வாழ்ந்துமுத்தி, பெற்றோர்கண் முத்தர்வழிப் பேறு. (க௦அ)

கீதாசாரத்தாலாட்டுப்பிரபந்தம்

முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ-தத்துவராயசுவாமிகள் அருளிச்செய்த

# சசிவர்ணபோதம்.

இஃது

சமிவனக்ஷேத்திரமென்னுங்கோயிலூர்

ஸ்ரீ-முத்துராமலிங்க சுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

அ - இராமசுவாமிகளால்

கோயிலூர் ஏட்டுப்பிரதிப்படி

பரிசோதித்து

சென்னை:

மிமோரியல்அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

விருத்தாசலபுராணத்திலுள்ள

# சசிவர்ணன்சரித்திரம்.

நாரணன் றன்னைநோக்கி நம்பர்தா மருளிச்செய்வார், சீரணிதவத்தினோர்கள் சேவையின் பெருமைகேளீ, ரோணிபாவவெச்ச னென்றொருமறையோன்மைந்தன், ரூரணிதன்னிற்பாவி சசிவர்ணனென்பான்மன்னோ. (க)

பத்தரையும்மையெம்மைப் பரவுவேதத்தைநீற்றை, மெய்த்தருமத்தைநிந்தை விளம்புவதவன்றன்கல்வி, நித்தலுங்களவுசெய்து நியமந்தன்னடுத்தார்தம்மைக், குத்திரஞ்செய்தருனே குலாசாரமாவதம்மா (உ)

மாதனைக்கிளைஞர்தம்மை வாலனைக் கருவைக்கோவை, வேதியர்தம்மைக்கொல்லும் விரதமேவிரதநல்ல, நீதிகளுடையோர்வீட்டி னெருப்பிட்டும் விடங்களிட்டும், பாதகப்பொடிகடுவிப் பறிப்பதேயவன்றன்கேள்வி. (ங)

பத்திரமெழுதியேவற் பணியினர்போலச்செ

துமுன்னை, மித்திரர்போலப்பேசி விருந்துண்டுகள
வுகொண்டு, சத்துருவாகப்பேசித் தனிப்பழிதிராகி
ன்றான். (௪)

நிறைத்தபொய்யோலைகாட்டி நிலங்களுந் தன
முங்கொண்டு, மறைத்தவவேடங்கொண்டு வழிக்
கனைவந்தியிட்டுப், பறைச்சியைமனைவியாக்கிப் பா
தகரிணக்கஞ்செய்து, மிறைச்சியுமீனுங்கள்ளு மீய
லுமருந்தாநின்றான். (௫)

சுரர்களாயிவன்றன் வர்க்கஞ் சுவர்க்கத்தைய
டைந்தோரொல்லாந், தரமிலாநரகில்வீழ்ந்தார் சசி
வர்ணன்செய்தபாவ, முரண்முயலகனும்பேயுநோ
யுமாய்மொய்த்துவீழ்ந்தா, னரகமும்வருவனென்
றுநடுங்கிடத் தொடங்கிற்றம்மா. (௬)

வெறுத்திடவொருவன்செய்தபாவங்கண்மிக்க
ஞான்று, பொறுக்குமோதெய்வமிம்மை தன்னிலே
புடைத்துப்பின்னர், மறுத்திடாநரகில்வாட்டும் பு
ண்ணியமலிந்தஞான்று, நிறுத்துமோவிம்மைகாட்
டு நெருப்புநீர்மிகுதிபோல. (௭)

சசிவர்ணன்றந்தையாருந் தனையிடைப் பணி
ந்துபோற்றி, யிசையுளதேவபத்த ரொன்னுமாதவ
னைநோக்கி, விசையுளமைந்தன்செய்த வினையெலா
ம்விளங்கச்சொன்னார், கசிவுளதேவபத்தர் கருணை
யாலுபதேசிப்பார். (௮)



அழுங்கியபாவவெச்ச வருண்முதுகுன்றன்மு
த்தி, வழங்குவான் வைத்தநந்தி வரையுநாற்காத
வெல்லை, செழுந்திருமலையாள்பூசை செய்தசத்தீசு
ரத்துக், கொழுந்துபட்டயனார்பூசை கொடுத்தபின்
சிருட்டிபெற்றார். (௯)

பூருவ மகவான்பூசை புரிந்து வானரசனானா,
னேருறுமிந்திராணி பூசையாலவனைச் சேர்ந்தாள்,
தாருகாசுரன்பூசித்துத் தானவர்க்கரசனானா, னரு
ளுவெள்ளிபூசித் தவர்புரோகிதருமானார். (௧௦)

உருவசிபூசையாலே யுயர்மகவானைச்சேர்ந்தா,
னிருமலநந்திவெற்பி னீயுநின்மகனும்போகித், த
ருமதானங்கள்செய்து சத்திநாதனையும் போற்றிப்,
பருவனைதனின் மானந்தி பாராயண ரிருப்பார் கே
ண்மோ. (௧௧)

அந்தமாயோகிதன்னை யானதசேவைபண்ணி
ன், மைந்தனோயகலுமென்றார் மறைமுனிவாக்கை
நம்பி, யிந்தமால்வரையினண்ணி யீசானகங்கையா
டித், தந்தையுமகனுஞ்சத்தித் தலைவனைப்பணிந்து
போற்றி. (௧௨)

பரமதேசிகராநந்தி பாராயணர்தம்மைப்போற்
றி, யுரமுறப்பணிந்துசேவை யுற்றபின்மைந்தன்
செய்த, கரவுடைப்பவங்கள்சொன்னான் [illegible]

ஞல்யோகிநோக்க, விரவுபாதகங்களெல்லா மேவி டாதகன்றதன்றே. (கங)

யோகிதன்பூசைக்கேற்ற வுபகரணங்கள் செய் தும், போகமார்பசுக்கண்மேய்த்தும் பொற்பதம்பி டித்துநிற்ப, வேகியபவங்கணீங்கி வியாதியுநோயு ம்பேயு, மேகியதுடனேபின்னர்ப் பரிகலச்சேடமீ ந்தார். (கச)

பரிகலச்சேடங்கொண்டு பதத்தினிற்பூசைசெ ய்தா, னரியநீறியோகிசாத்தி யடியினைத்தலைமேல் வைத்துத், தெரிவுறவுபதேசித்தார் திவ்வியஞான ம்பெற்றுத், தரிவுளமுத்திபெற்றான் றந்தையுமுத் திபெற்றான். (கரு)

பிதிர்க்களு நரகம்விட்டுப் பெருஞ்சிவலோக ஞ்சேர்ந்தார், கதிர்ச்சசிவர்ணர்காதற் புலைச்சியுங்க தியிற்சேர்ந்தாண், மதித்திருமாலேகேளீர் மாதவர் பெருமைதன்னைத், துதிக்கரிதின்னஞ் சொல்வோ ஞ்சுவகையென்றுருத்திவேசி. (கசு)

சசிவர்ணன்சரித்திரம்

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சசிவர்ணபோதம்.

---

மோகவதைப்பரணியிலுள்ள

கடவுள்வணக்கம்.

மதிபரிதியெரிநீர்கால் வானவனியியமானன்வ டிவாயெல்லா, வதிபதியாயனைத்துமா யல்லாதவறி வுருவை யகத்துள்வைப்பாம். (க)

சொல்லாற்றம்மதிவிரகாற் றாயதிதுதீயதிது வென்னுமாக்க, ளெல்லார்க்குமதுவதுவாயிறையிரு க்கும்படியேயா யிருக்கவென்றே. (உ)

கடவுள்வணக்கம்முற்றிற்று.

ஷை பரணியில் பேயிரங்கலதிகாரத்

தொடர்புபாடல்.

முடிவுமாதியுமற்றமுழுமுதல்
வடிவமாகிவரும்படியெங்ஙனே. (க)

சொல்லுகோலஞ் சுருதிவிருத்தமோ
வல்லவோவென வன்னையருளுமே. (உ)

அருவனாயினு மன்பர்க்குருவனாய்
வருவனென்பது மாமறைசொல்லுமே. (ங)

பத்தியாம்வலையிற்படும் பார்மிசை
புத்தியாலறியொண்ணுப் புராணனே. (ச)
தேவியிப்படிக்கூறத் திருவருள்
பாவியேற்கிலதென்று பதைக்கவே. (ரு)

தொடர்புபாடல் முற்றிற்று.

## நூல்.

அலகையச்சமறவகவான்களு
முலகின்முத்திபெறும்பரிசோதுவாம். (க)
புணர்ந்தபாவமெலாம்பரிபூரண
முணர்ந்தஞானிவிழிபடவோடுமே. (உ)

வேறு.

எழிலாருஞானிபுகழென்னைகூறவுயர்வீடிவன் சொல்வழிசெய், தொழிலாளர்சேர்கையதுகேளு முன்னை யிதிகாசமொன்றுசொலவே. (ந)

தந்தாபமற்றபரனேவல்செய்த லவனுற்றபே றுதனைமுன், செந்தாமரைக்கண்முதல்வற்கெம்ம ண்ண றிருவாய்மலர்ந்ததிதுவே. (ச)

உவமிப்பின்ஞானிவிழிபட்டுமுன்னை வினைவிட் டுமுத்தியுலகிற், றவமற்றவெய்யவினையேபுரிந்த ச சிவர்ணனெய்துகதையே. (ரு)

வேறு.

ஏமம்புகுவாருளபாதகரா-மியாவர்க்குளுமிக்க வனுகுமிவ, னேமம்புகல்வார்குலமும்மெரிவாய்-நர



மலமேவியதீவினையின்வலியான்-மகிழும்பர்பத த்திலிருந்தவிவன், குலமேவியதென்புலவாணர்களு ங்-கொடிதாய்நரகங்குடியேறினரோ. (எ)

மிகமேவியபுண்ணியபாவமெனும் - வினையின் பயன்மேலொருகாலமுறு, திகமேவருமென்பதனு லுளநோ-யெல்லாமிவனைச்செறவெய்தினவே. (அ)

தன்புத்திரனேயும்விடாமையினுற்- றவறுற்ற விவற்பெறுதந்தையுளந், துன்புற்றினியென்னை கொலோபுதல்வன் - றுயர்தீர்வகையென்றுசுழன்ற னனே. (கூ)

ஒன்றுலும்வினைத்துயர்துய்ப்பதலா-லொழிவி க்குமுபாயமுனக்கிலதே, யென்றுலுமறிந்தவனன் புவிடா-திவனைக்கொடுழன்றனனெங்கணுமே. ()

ஒருமாதவன்மற்றிவன்வேதனைகண்-டொழிவ ற்றுளவொன்றையுளத்துணரும், பரமாகியஞானி கள்கண்ணுறலே.பரமாவிழ்தமென்றுபகர்ந்தனனே

தானந்தமிலாததனைத்தருவான்- சத்தீச்சுரமெ ன்னுமிடந்தனில்வாழ், மானந்திபராயணரொன்பவர் நின்-மைந்தர்க்குறுநோய்க்குமருந்தெனவே.(கஉ)

முடியாவுபதேசமிதென்றவனு - முனிவன்பத மெய்திமொழிந்தனனிக், கொடியான்வெருவாதுகு

ஈங்குன்றிருமுன்பகரும்படியோ- விவனெய்தி
யதீவினையென்னவெலாம், நீங்கும்படிதன்னனுபூதி
யினா-னிகழும்விழிவைத்தனனின்மலனே. (௧௪)

கணியாதபவக் கடுவானதிருக்-கண்வைத்தலு
ம்விட்டனகாதுகடும், பிணியாவையு நல்லபிதாவி
றைதாள்-பேணிப்பணியென்றுபெயர்ந்தனனே.()

இடனேமுதலாகவுவந்திறையோ - னேவும்ப
ணிசெய்திவனுஞ்சிலநா, ளுடனேயிவனே திருமே
னிதனக்-குரியானெனவுற்றனனும்பனொடே.(௧௬)

நன்றாய்முனிதாள் வழிபாடதனா - னானாவித
மானபிறப்பினைவிட், டொன்றாகியவீடுண ருத்தம
ர்கட்-குளசாதனநான்குமுதித்தனவே. (௧௭)

முனிவன்றிருமுன்புளதன்குறைதான்- *மொ
ழிவான்சிலவஞ்சலிகுஞ்சியதாய்ப்,பனிவந்திருகண்
கள்பதங்களிலே-பலகால்வலம்வந்துபணிந்தனனே

அருளேவடிவா கியமாமுனிதா- னறியாதவர்
போலவழுங்கலுறும்,பொருளேதெனமைந்தனடுங்
கினனிப்-பொல்லாதபவப்புணரிக்கெனவே. (௧௯)

வெருவும்பிறவிக்கடல்வித்தரமுன்- வேதாகம
கீதைவிளம்புமதைக், குருவுந்தனதன் பன்மனத்த
ளவிற்-கொளுமாறுதொகுத்திதுகூறிடுமே. (௨௦)

---

* மொழிவான் - என்றதற்குப் பொருள் - மொழியும்
பொருட்டு என்று கொள்க.



வேறு.

மரணபவங்களான புனலையுடையது- மதியை
விழுங்குகாம வரவுபெரியது, கரணவொழுங்கறுத
விடையவிளைநுகர்-கணமொடியங்குமீனமிகவுமுக
ள்வதே. (௨௧)

பெருமிதமென்றுகூறும் பெருமையுடையது-
பிணிகளெனுங்கெடாத புலவுகமழ்வது, வருமிட
ரின்பமான திரைகள்பொருவது- மனமெனும்வஞ்ச
ராஜமகரமுறைவதே. (௨௨)

அளவிலகந்தையாமை யபரிமிதமுள-தவாவு
நிறைந்தவாழமறியவரியது, களவுநெருங்கு பாரும
லையு முடையது-கலகவிடங்கண்மேவு கிருமி நெளி
வதே. (௨௩)

துகளெனுநன்கிலாதநுரைகடருவது-துறவியி
னின்பமானகரையைவிடவகன், மகளிரெனுந்தவா
தவலியசுழியது-மறலியுமஞ்சுகோப வடவையெரி
வதே. (௨௪)

வெருவருகின்றபோகமுதலையுடையது-விவிதம
னந்தமானதுறையுமறிபவ,ரொருவர்கடந்துபோக
விரகிலெழுபவ- வுததி விளம்பயாவருலகிலறிஞரோ.

பொறிவழிசென்று மீளுமவலமதிகொடு-பொ
ருசமயங்களாறுமறியவிழுமதி,லறிவழிவொன்றிலா
தபொருளதெனவுள- வனுபவவங்கமேறுமறிஞராக

புணரிகடந்துபோகவிரகிலெனமொழி-பொழுதுபுலம்பியாவிபுதல்வனிறமுன, முணர்வெனும்வங்கமேறுமறிஞராகல்வனொன் - றுளையைவழங்கிநாதனுவகையருளவே. (௨௭)

வேறு.

வாழியெனவிறைவனடி தொழுதுவருபவமா, மாழியிணையகலுமறிவருளுகெனவவரோ. (௨௮)

பரவறிவுமபரவறிவெனவுமிருபரிசாந், திரவறிவையறியுமவர்மொழிவர்தெளிவுறவே. (௨௯)

அபரவுணர்வருமறைகண் முதலகிலகலையு, முபரமமதறவுதவுமுணர்வுபரவுணர்வே. (௩0)

ஆகமவிதங்களறிவாரபரமறிவார், யோகமொடுறங்குமவரோபரமுணர்ந்தார். (௩௧)

புராணமிதிகாசமெவையும்பொருளனைத்தின், பிராணனறியாதுளவிடத்திவைபிதற்றே. (௩௨)

இயலறிவதிசையறிவ தினமறிவதுளதா, மயலறிவதறிவதலவறிவறிவதறிவே. (௩௩)

நவிலுகலையறுபத்துநாலுமறிவாரும், பவலயமதறுசுத்தபரமமறியாரோ. (௩௪)

ஆகவறிவாளரறி வாரிவையனைத்து, மேகவறிவாளரிவையாவுமறியாரோ. (௩௫)

ஐயறிவறிந்தவை யடங்கினவரேனும், மெய்ய



மெய்ம்மையறிவல்லதமில் வேறறிவதெல்லாந், தம்மையறியுமறிவதேயறிவுதானே. (௩௭)

பூசனையுமதுசகலபொருளுமறிதமையு, மீசனையும்வேறதறவறிவதறிவெனவே. (௩௮)

தானெனுமுடம்பது தனைத்தவிரவேறு, யானெனுமருத்தமுளவோவருளுகெனவே. (௩௯)

வேறு.

எனதாடைபொன்பூமகன்றையல் பாய்மா-விபங்கண்முகங்கால்கை மெய்யென்னவென்றுந், தனதாயுரைப்பான் வகுத்திந்தவுனைத்-தானென்றயர்த்துஞ்சொலத்தக்கதன்றே. (௪0)

தாளாகவூராழியார்வென்னில்வீணை-தண்டாகவன்மார்புதட்டாகமொட்டாம், நாளாமலர்ச்சென்னிகூந்தற்கொடித்தேர்-நாணுளூமூர்வானில் வேறுகநாடே. (௪௧)

கடக்குஞ்சரம்பண்ணியுண்ணின்றொருத்தன்-கைபாதகன்னங்கண்மெய்போலியக்குங், கிடக்குநடத்தாவிடத்திவ்வுடம்புங்-கிடக்கும்மொருத்தன்னடத்தாவிடத்தே. (௪௨)

ஒருகூறுமலமாகுமொருகூறுடம்பாகு-மொருகூறுமனமாகுமுண்டற்றவன்ன, மிருகூறுநீயாகிலொருகூறுநீயா - மிழிக்குமலஞ்சோரிடப்பட்ட

ளராதரத்துண்ணுமன்னஞ்சுடக்கை- கிட்டப்
பொருதேயிருந்தார்முனிந்தார், தளராதுறுப்பொ
ன்றுமுயிர்போகவன்றே - தழற்பள்ளிமீதேதுயின்
றார்சகித்தே. (சச)

நிழற்பாவைகண்ணாடியிற்பாவைகைகா-ணிமிர்
க்கும்முடக்கும்மிவன்செய்தவெல்லாந், தொழிற்
பாலவாமற்றிவ்வுடலஞ்செய்தொழிலுஞ்-சுடர்ஞா
னவடிவானவன்செய்ததொழிலே. (சரு)

அறிகின்றபொருளென்று மறிவானில்வேறே-
யானாலிவ்வூனாகநானென்னலாமோ, செறிகின்றபுள்
ளல்லவேகூடிவ்வகையே-செடமானவுடனின்னில்
வேறென்றுதெளியே. (சசு)

நிலமாகும்வர்க்கென்றனெகிழ்கின்றநீரா - நெ
ருப்பாமிதிற்சுட்டவெல்லாமுமநிலஞ், சலமானபு
னையானவானிந்தவுடலஞ்- சடமானவைம்பூதவுரு
வங்கடாமே. (சஎ)

விழியைப்புமானென்னில்ரவியாதியாலே-விள
ங்கின்றதல்லால்விளங்காமையாலே, யொழியப்படு
டுங்கன்னமுதனாலுமுன்ற - னுருக்கண்டகண்டன்
னையொப்பாகவுன்னே. (சஅ)

வேறு.

அழலுண்பொருள்களிலுண்பவைமுக்கூறதின்
முதற்கூ- றணியென்புநடுக்கூறதுமச்சைக்கணியா



உண்ணும்புனன்முக்கூறதின் முதற்கூறுவர்நீ
ரா- முதிரம்நடுவிற்கூறு கடைக்கூறுபிராண, னெ
ண்ணுமிதிலிருகூறவை நீயாயிடினன்றே- விறுகின்
றபிராணன்னது நீயாகுவையிசையே. (ரு0)

பிராணனுமல்லதுஞ்சிலுணர்வின்மையாலஃது
ணரும்புலன்களொழிவாற், பிராணனதென்னின்ம
ன்னையொழியாதுசேனைநகர்சூழ்வலஞ்செய்பொழு
தே. (ருக)

கரணமொடுங்கவாயுநிகழ்வென்கொலென்னி
லுடல்காவலாகுமலதேன், மரணமடைந்ததென்
றுதமர்சுட்டிடாமுன்வளைவாலின்ஞாளிகொளுமே.

இனமுறவெண்ணவுள்ள கரணத்திலொன்றி
தெனலாலிதென்னதெனலான், மனமுனமன்னமெ
ன்றவதனாலுமல்லமதியல்லவந்தவகையே. (ருங)

இடரின்புளதாய்நிலையற்றறிவற்றெண்ணுங்க
ரணங்களிலாயெவரு, மடரும்பிறவிக்கடியென்று
ணரு மகங்காரமுநீபலவென்றறியே. (ருச)

ஐயப்படலோர்பொருணிச்சயமா யறியப்பட
ல்யானெனதென்றுமதஞ், செய்யப்படல்செய்வது
சிந்தனையாஞ்சித்தமதுவன்றெனநீதெளியே (ருரு)

முன்னாகவுடம்பதுசித்தமதே முடிவாகமெ
பிந்தபொருட்டிரடா, னின்னாகிலநீயறியும்பொரு

உன்னலறியப்படுமியாவையுமுன்னுருவன்றெ னவோதினையொக்குமெனக், கென்னலறியாதொழி யும்பொருளோ யானுகுவதென்றனனென்றனுமே.

அறியாப்பொருள்காரணமாயைகுறித். தறியும் பொருள்காரியமாமுலகிங், நெறியாற்றிகழ்நான்ம றையந்தமெலாம்.நீயன்றெனவோதுநிரந்தரமே()

அறியும்பொருளன்றறியாப்பொருளன். றறிவா கியநீயெனுமப்பொருடான், பொறியின்வழிநின்ற றியும்பொருளோ. போதக்கண்விழித்தறியும்பொரு ளே. (௫௯)

வேதப்பொருடானிதுவேறுசொலும்.வினையா வையுமன்றொருவேறுமிலாப், போதப்பொருளந்த மறைக்கணியாம். புனிதப்பொருடத்வமசிப்பொரு ளே. (௬௦)

வேறு.

விமலமாம்பரமதுவெனும் பொருணீயெனும் பொருள்சீவனே, யமலமானவிரண்டயிக்கியமசிப தப்பொருளாவதே. (௬௧)

அருமையாகியபிரமமுன்னிலை யாகுமாருயிர்பி ன்னிலை, யிருமையாயவிரண்டயிக்கியமெய்துமாறெ வனென்னவே. (௬௨)

உபாதியால்வரு பேதமேயிவர் பேதமன்றுரு வுயிரினின், கபாதியாமுடல்போலிறைக்குள கார



ஈசன்முற்றறிவான்வியாபியெவைக்குமேதுவி யம்புமா, காசகன்னிருபாதியாவனே காரணாதிகளா வதே. (௬௪)

நீதியாலிருபாதிநீக்கிட நீயெனச்சொல்பதத்தி னு, மாதியாகிய தத்பதத்தும சுத்தசுத்தமு ளாத் துமே. (௬௫)

ஆகமுன்றிக ழேழுநானெனல் த்வம்பதத்தில சுத்தமே, சோகமின்றியசாட்சிநானெனல் த்வம்ப தப்பொருள்சுத்தமே. (௬௬)

அகிலகாரணமாதிநானெனல் தற்பதத்திலசுத் தமே, சகலகாரணசாட்சிநானெனல் தற்பதப்பொ ருள்சுத்தமே. (௬௭)

செறிந்தகாரணகாரியங்கள் சிதைந்துமேலுறு சித்ததா, யறிந்தவாதனைதானுமற்றதவ் வசிபதப் பொருளாவதே. (௬௮)

அசுத்தமாகிய திருபதத்திலு முக்கியப்பொரு ளாவதே, விசுத்தமானதிலக்கியப்பொரு ளென்று சொல்லுவர்விமலரோ. (௬௯)

முரண்டசிவ பரங்கடம்முடன் முக்கியப்பொ ருளாவதே, யிரண்டில்வேறறுசிற்சொரூப மிலக்கி யப்பொருளாவதே. (௭௦)

ஊக்கியப்பரசிவர்தங்க ளுடம்பிரண்டு மிலக்க ணு, வாக்கியப்படி நீக்கிஞலொரு வஸ்துவேபரவ

ஓரில்விட்டதும் விட்டிடாதது முபயமும்மெ
னவுணர்வுளோர், தேரிலக்கணை திரிவிதத்திலிசைப்
பர்மற்றதியம்புவாம். (எஉ)

மஞ்சுகூப்பிடுமென்றல்போலவும் வடபகிரதி
யுள்ளதே, விஞ்சுகோஷமதென்றல்போலவும் விட்
டலக்கணையாவதே. (எங)

சிவலைநின்றது வெள்ளைபோயின தென்றுசெப்
புதல்போலவே, கவலையின்றிவிடாதலக்கணையென்
றுநீகொள்கருத்திலே. (எச)

மேவும்விட்டுவிடாதலக்கணை மெய்மையாதெ
னிலந்தவித், தேவதத்தனெனும் பொருட்படிசிந்
தைசெய்திடுதிரவே. (எரு)

விட்டலக்கணை தன்னையும்விட்டு விடாதலக்கணை
தன்னையும்நீ, விட்டுவிட்டுவிடாதலக்கணை யால்விளங்
குவிளங்கவே. (எசா)

போதுமேவிய தேசம்விட்டொரு புருடனைக்
கொளுமாறுபோ, லோதுமீருடல்கண்டுவிட்டதனு
ண்மைகாணவுணர்ந்திடே. (எஎ)

வேறு.

பிரியாவுயிர்காரியமாமுடலும் பிரமத்துறுகா
ரணமாமுடலுங், கரியாகியவாதனையுங்கழியக்காட்



கரணத்திரணிற்பினுமப்பொருளைக் காணக்கி
டையாதவைகையறவே, மரணப்படினும்மதுகண்
டுகொளும்வழியில்லையெனும்படிநீமதியே. (எசா)

எந்தக்கரணங்களுமே வனுவிதில்வாதனையா
ல்விடயங்களொடே, வந்தக்கரணங்கள்பொருந்தல
ஞவவைமாய்தல்சுழுத்தியவத்தையதே. (அ0)

வேறு.

வினவிற்பரத்தையறிவுறுதற்கவத்தைபுலன்வி
னைமாறியே, நனவிற்சுழுத்திநிலைவரினப்பொருட்டி
கழுநலமாகவே. (அக)

திவிதத்தவத்தைகளையறிவுற்றவத்துரிய நிலைசி
வனே, யிவிதத்திலப்புருடனனவுற்றவத்துரிய நிலை
யீசனே. (அஉ)

அகிலக்கரிப்பாமதுரியப்பொருட்டுரியமதுவா
கையே, புகலுற்றதத்வமசியெனுமுப்பதத்தின்முடி
பொருளாவதே. (அங)

நிமலப்பொருட்சுருதிநெறியிற்பெறக்கருணைநி
திகூறவே, யமலப்பொருட்பெறுதலருமைத்தென
க்கழறியடிவீழவே. (அச)

தமரக்கலைக்களவு தெரிவற்றதற்பொருள்கட
னையிருவா, னமரர்க்களப்பரியபத நற்புனற்கொடு
செய்தபிடேகமே. (அரு

பவளத்தில்வைத்தவமிர்தினின்மிச்சிலிட்டினி யபரிவோடுமா, தவளப்பொடிக்க வசமெனவிட்டு டற்பகைகடலைசாயவே. (அசு)

உதகத்துடற்பொருளொ டுயிர்கைக்கொடுச்சி மிசையொருபோதொடே,பதகத்தலத்தைவிடவிரு கைத்தலத்தொடிருபதமேவியே. (அஎ)

ஒழியப்புலக்கணுபவிடதப்பொருட்டெரியவுள ஞானமாம், விழியைக்கொடுத்துமொழி யெனமுப் பதப்பொருளும்வெளியாகவே. (அஅ)

நனவைத்துவக்கிமுடிதுரியத்தைமுற்றவிறை ந வினீதியே, மனவர்க்கமற்றவனுபவமுற்றசிற்கசன வலியோதுமே. (அகூ)

வேறு.

புரணமாகவேபுறம்புளபுலன்களுமந்தக், கர ணமியாவையும்வழங்கிடம்நனவெனக்கண்டேன்.

புரணமாகியபுறம்புளபுலன்களுமந்தக், கரண மியாவையும்வழங்கிடங்கனவெனக்கண்டேன். ()

மரணமாகியதிசையிதுவெனும்படிமனுதி
காரணமியாவையுமிறந்துளசுழுத்தியுங்கண்டேன்.()

எஞ்சலின்றியெக்கரணமுமிறந்திருண்டிருந்த
துஞ்சலங்குணர்போதமாந்துரியமுங்கண்டேன். ()

அரியமாகியபோதமோர்துளக்கமற்றனைத்தின்
கரியதாயிருந்திடம்பரனனவெனக்கண்டேன். ()



புணர்ந்தவிச்சகத்தொழித்துணர்போதமாந்த னையே, வுணர்ந்தமற்றதுபரன்கனவெனும்படியுண ர்ந்தேன். (கூடு)

சான்றுசாக்கிய மிறந்திடத்தானிருந் தமையு ந், தோன்றுருவிடம்பரன்சுழுத்தியதெனத்துணிந் தேன். (கூசு)

மரித்ததென்றுணர்ந்துரைத்ததும்மரித்திடந்த னிலே, தெரித்தபோதமேததுபரன்றுரியமாய்த்தெ ளிந்தேன். (கூஎ)

இறையெனும்பொருட்டுரியமேயென்னையாண் டவனே, மறையினந்தநற்பதப்பொருணனவெனம தித்தேன். (கூஅ)

பண்டைவிச்சுவவாதனைப்பழுதுபோய்முழுதுங்
கண்டகண்ணதேயாகியகனவதுங்கண்டேன். ()

காட்சியாவையுங்கண்ணதாயக்கணுங்கரைந்த
மாட்சியாகியவகோசரமுறக்கமாய்மதித்தேன். ()

அருந்தவாமறையந்தமாமகோசரந்தனினி
யிருந்தவாறறிவித்தவாறெங்ஙனமிசைப்பேன். ()

எம்பிரானிடந்தொறுமிடந்தொறுமதுவதுவாய்த்
தம்பிரானடஞ்செயும்வகைசாற்றுமாறறியேன். ()

ஆவியேயடியேன்செய்கைம்மாறுனக்கென்னெ னிற், பாவியேனதுதானுமுன்னுடையதாம்பண் டே. (கOரு)

ஆவல்செய்தெனதாக்கையுள்ளளவுநின்னடியார்க்
கேவல்செய்வதேயன்றிமற்ருென்றுநானறியேன். ()
இறவிலெப்பதமும்பெறவேண்டிலேனென்றும்
பிறவிவேண்டுவனின்றிருப்பணிசெயப்பெறினே. ()

வேறு.

என்றுபலகால்விழுமெழுந்தொழுமழும்புரியு
மென்னையினியா, னின்றுபலவாகவுரைசெய்தவவ
னன்பிஞெடுநெஞ்சுருகியே. (௧௦௬)

ஏட்டிலறிவின்றியிறைதன்னிலறிவின்றியிவ்வு
டம்பினுடனே, வீட்டிலுறைவானையினிவீடுபெறு
மென்பதுவிளம்புகிலமே. (௧௦௭)

வஞ்சவலியானரகில்வீழ்பிதிரரங்நரகுபாழ்பட
மிகா, விஞ்சைவலியாலடையவேறினர்சுராதிபர்க
ண்மேலுலகமே. (௧௦௮)

தேவருமனித்தருமிவன்ருெழில்வியந்துணைசெ
யப்படுவதோ, மூவரும்வணங்கிமுடியாலவனதேவ
ல்செயமுந்துறுவரோ. (௧௦௯)

ஞானியைநரன்சுரனெனுதொழிகஞாலமுயநா
தனருளான், மேனியதுகொண்டுதனைநல்கவருமெ
ன்றறையும்வேதமுடிவே. (௧௧௦)

ஆகத்திருவிருத்தம்-௧௧௦.

சசிவர்ணபோதம்முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.
சர்வஞ்சின்மயம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

---

ஸ்ரீ சிவப்பிரகாசசுவாமிகள் அருளிச்செய்த

# வேதாந்தசூடாமணி.

---

இஃது

சமிவனக்ஷேத்திரமென்னுங்கோயிலூர்

ஸ்ரீ-முத்துராமலிங்க சுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்

மாணுக்கர்களிலொருவராகிய

அ - இராமசுவாமிகளால்

கோயிலூர் ஏட்டுப்பிரதிப்படி

பரிசோதித்து

சென்னை:

மிமோரியல்அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# வேதாந்தசூடாமணிமூலம்.

## பாயிரம்

தருணமாதுமைமுகத்தாமரைக்கெழு ... ... ... *
மருணனுமெனவுதித்தடியர்பாற்புரி ... ... ... *
கருணைமாமதமெனக்காட்டுமாமுகன் ... ... ... *
சரணவாரிசமலர்தலையிற்கொள்ளுவாம். ... ... (க)

அருமறையின்பொருடெரித்த விவேகசிந்தாமணியதனு
ளறைவேதாந்தப், பொருளினைமுந் நீர்வரைப்பி னுலகறியச்
செந்தமிழாற்புனைதல்செய்தான், பெருகுசுவைநறவொழுகு
செஞ்சொன் மலராற்புனைபாப்பெருந்தண்மாலைக், கருமிடற்
றுவானவற்கேசாத்து சிவப்பிரகாசன்கவிஞர்வேந்தே. (உ)

சீர்கொண்டவருமறையின் முடிமணியைத்தெய்வ
சிகாமணியையடியவர் தங்கண்மணியையமாயைப்
பேர்கொண்டவிருளிரிக்குந் தினமணியைமுக்கட்
பெருமணியையகத்தினுக்கோர் விளக்காகவிருத்தி
யேர்கொண்டவிவேக சிந்தாமணியெனு நூலதனு
ளெடுத்தியம்பும்வேதாந்தப் பரிச்சேதப்பொருளை
நேர்கொண்டதமிழ்விருத்த யாப்பதனாற்றெரிய
நிகழ்த்துவன்வேதாந்த சூடாமணியென்றன்றே. (ங)

பாயிரம் - முற்றிற்று.

## நூல்.

வேதமொருநான்குமாறங்கமுநன்னியாய
மீமாஞ்சையொடுமிருதிபுராணமுமீரேழா
வோதலுறும்வித்தைகளாமவற்றுண்மீமாஞ்சை
யுயர்ந்ததாயைந்நான்கத்தியாயமாயருத்த
பேதமுறவிருகூறுமவற்றுண்முதற்கூறே
பிறங்குமருட்சைமினிசூத்திரரூபமாகிப்
போதுமீராறத்தியாயங்களாய்க்கருமப்
பொருளுணர்த்திப்பூருவமீமாஞ்சையெனப்படுமால். (௪)

சாற்றியவச்சைமினிசூத்திரத்திற்குமிக்க
சாபரமென்றொருபாடியம்புரியப்பட்ட
தேற்றமிகுமம்மீமாஞ்சைக்குமதம்பாட்ட
மெனவொன்றுபட்டாசாரியனல்வந்தன்று
போற்றுமவன்சீடனாகியபிரபாகரனாற்
புகழ்பிரபாகரமெனவோர்மதாந்தரநன்கமைய
வாற்றியவச்சாபரபாடியமதற்குவிளங்க
வாக்கப்பட்டுலகமெலாமறிந்திடநின்றதுவே. (௫)

உரைத்தவிரண்டாங்கூறுபிரமமுரைப்பதனு
த்தரமீமாஞ்சையெனப்பட்டருள்கூர்வியாதன்
றெரித்தசூத்திரவடிவமாகியிருநான்கத்
தியாயமாமவற்றுண்முதனான்கத்தியாயம்
விரித்தலுறுதேவதாகாண்டமெனப்பட்டு
விளங்குறுதெய்வதவிலக்கணம்பலபத்திரனு
னிரைத்துரைசெய்யப்படுமேனான்கத்தியாய



அப்பிரமகாண்டத்துட்சிவமொடுயிரயிக்க
மறைதலாற்சங்கராசாரியனுங்குருவா
லொப்பரியபாடியமென்றுரைக்கப்பட்டதுபின்
னுரைத்ததற்குவிவரணாசாரியனென்பவனாற்
செப்பரியவிவரணமாய்க்கூறப்பட்டதுவே
தெரியின்வேதாந்தநூலென்றுரைக்கப்படுமா
லிப்பெரியவேதாந்தநூற்பொருளினகல
மெங்ஙனமென்றிடினுரைத்து மியம்பியநான்முறையே. (௭)

வாய்த்தநான்முகத்துரைக்குமங்களாசரணை
வாழ்த்துவணக்கொடுவத்துநிர்த்தேசமெனமூன்
றுத்தபதம்பதப்பொருளேவாக்கியயோசனையே
யறிவினுவிடையிவையைந்துரையினிலக்கணமாங்
கோத்துரைசெய்விசேடவிசேடியங்கருத்தாகருமங்
கொள்கிரியையிவையைந்துவயவிலக்கணமாஞ்
சாற்றுமனுபந்தசதுட்டயநூற்குவிடயஞ்
சம்பந்தம்பயனதிகாரிகளெனநான்கறியே. (௮)

விடயமதுசிவசீவர்தமதேகத்துவமாம்
விமலனொடுநூற்கறையப்படலறையுந்தன்மை
யடைதலுறுசம்பந்தம்பயன்றுயரொலாநீத்
தானந்தப்பதம்பெறுதல்சாதனநான்கினையு
முடையவனேயதிகாரியென்றறைவரறிஞ
ருரைத்தசாதனசதுட்டயநித்தவநித்தப்
படுபொருளின்விவேகமிகபரபோகவிராகம்
பழிப்பரியசமைமுமூட்சுத்துவமெனப்படுமால். (௯)

நித்தியமான்மாவேபொய்விடயமெலாமெனத்தேர்

மெத்திவருமிகமுடனுத்தரத்தில்வருபோக
விராகமிம்மைமறுமையுளவிடயநுகர்வனைத்தும்
பொய்த்தழியுமிடும்பைமயமெனவிடுதலாகும்
புகழ்சமமயேமுதலாயசட்குணங்கள்பெறுதல்
வைத்தசமமயியல்பாயமுத்திவிருப்பதுவே
வயங்குமுமுட்சுத்துவமென்றறிந்திடுகமதித்தே. (௧௦)

சமைதமையேதிதீக்கையுபரதிசிரத்தைசமாதி
சமைமுதலாமறுகுணங்களுட்கரணமடக்கல்
சமைதமைதான்புறக்கரணமடக்குதல்காமாதி
தணித்திடுகைதிதீக்கைகருமங்களனைத்தினையுஞ்
சமையெனவேவிடுதலுபரதிசுருதிகுருவைத்
துணிவினனம்புமதேசிரத்தைகுருமொழிநெஞ்
சமைவுறவேதிட்பமுறல்சமாதியிச்சாதனஞ்சே
ரதிகாரிசெயுங்குருசேவையினையெடுத்தியம்பில். (௧௧)

ஆத்தமுடனங்கமேதானஞ்சற்பாவ
மாமவற்றுட்குருபரனுக்கனுகூலவிருத்தி
யாத்தமுயர்குருபரன்குற்றேவலேயங்க
மருட்குரவர்க்குரியமனைநிலமுதலாமவற்றைக்
காத்தலதுதானமாஞ்சற்குருவேமெய்யாய்க்
கண்டசிவமெனநம்புமதுவேசற்பாவ
மேத்துகருமம்பத்திமிகுஞானகாண்டி
யெனுமிவற்றுண்மூவதிகாரிகள்வேறுமுளரால். (௧௨)

உடம்பினையும்வருகுடும்பந்தனையுமியானெனதென்
றுளன்கருமகாண்டியெலாக்கிரியையுமீசற்கே
இடம்பெறநின்றுக்குமவனேபத்திகாண்டி



மடந்தவிருநன்ஞானகாண்டியெனலாகு
மற்றுமுளவைவொருவர்க்கொருவருயர்வா
யடைந்தவதிகாரிகளங்கவர்கருமிமுமுட்சோ
டறையுமப்பியாசியனுபவியுடனாருடன். (௧௩)

மூடமொடுதன்சாதிகருமமேபற்றி
முத்தனுமவனூறுபிறப்பினிலொண்கருமி
நீடுலகமின்மையெனநினைந்துபுறக்கரும
நிட்டனுய்முப்பிறப்பின்முத்தனுமவனே
நாடரியமுமுட்சுலகங்கனவெனக்கண்டுள்ள
நற்கருமஞ்சேர்ந்துபிறப்பிரண்டுளனப்பியாசி
வீடுலகவிவகாரநினையாமல்விவேக
மேவியோர்பிறப்பினுன்முத்தனனுபவியே. (௧௪)

உலகநிலைதோன்றுமற்றன்றிகழ்ஞானத்தா
லுண்மைமுத்தனுமவனேயாரூடன்மற்று
முலகமுதல்யாதெனத்தேர்வொடுகுருவையடைந்து
முடம்பாதிபொய்யெனக்கண்டருட்குருவையடைந்து
முலகிலொருகுரவன்றன்மகற்குபதேசஞ்செய்
துறக்கேட்டுமுயர்தருஞானிகளாகிமுத்தி
யுலகுதொழுவிவேகமொடுவிரத்திதெய்வகதியா
லுற்றிடுவோர்மூவரதிகாரிகளாகுவரால். (௧௫)

சாதகர்களாஞ்சீடர்பேதத்தாற்குரவர்
தாமும்போதககுருவேமுதலாகவிருநாற்
பேதமடைகுவரவருட்போதகன்முன்னூலிற்
பெரும்பொருள்கூறிடுபவன்றத்துவந்திகழ்த்துபவனே
வேதகனல்வசியாதியாலிம்மையின்பம்

போதகஞ்செய்திருமையினுமின்பமருள்பவனே
புகழ்தருகாமியகுருவென்றறைகுவர்மூதறிஞர். (௧௬)

சூசகனும்விவேகத்தாற்சமைமுதலாங்குணங்க
டொகுப்பவன்பொய்விடயமெனவான்மவிருப்பருள்வோன்
வாசகனுஞ்சிவசீவரயிக்கியஞானத்தை
வழங்குமவன்காரகனையந்தவிர்த்துநிலைத்த
வாசகனுமுத்தியருள்பவன்விகிதகுருவா
மதிகாரிகளாகுமெனமுன்னர்க்கூறு
நேசமுறுசீடர்தம்முளொருவன்முத்தாப
நெருப்பினல்வெந்துசிந்தாகுலமுடையனாகி. (௧௭)

நானரிப்பவமெனக்குவந்தவாறொன்கொ
னசிப்பதெவராலெனவாய்ந்தலர்கரங்கொண்டேகி
யானநற்கல்வியறிவடக்கம்வயிராக
மாதியாங்குணமுடைச்சற்குருவையடைந்தெதிர்மண்
ணாரப்பணிந்தெழுந்தன்பாற்கரங்கள்குவித்தே
யுறவழுத்தியருட்குருவேயென்பாசத்தொழிவு
தானுமெத்திரத்தினாலெனவினவல்சீடன்
றனதுவிதிவத்துபசன்னத்துவமாமன்றே. (௧௮)

அனையவனதிகாரந்தெரிந்தருளானோக்கி
யஞ்சலோம்பென்றபயகரஞ்சிரத்திலிருத்திப்
புனையவருஞ்சுருதியுத்தியாலவனதனான்ம
புத்தியினையொழித்துத்தாதான்மியவாக்கியத்தா
னினையலருமொருபிரமநீயேயென்றள்ள
நிலையையுணர்த்துதல்கு
பினைய



அறியவுணர்த்துறுபொருளைநாமமாத்திரத்தா
லறைந்திடுதலுத்தேசமாங்களகம்பளமாங்
குறியுடையதானெனல்போலப்பொருளிற்சிறந்த
குறியுணர்த்தலிலக்கணமவ்விலக்கியமாம்பொருளிற்
செறிவுறுமவ்விலக்கணமுண்டோவிலையோவென்னத்
தெரிந்திடுதல்பரிட்சையோர்பொருளறிந்துபெறற்குப்
பொறியுறல்செய்காட்சியாமளவைமுதலாகப்
பொருந்துபிரமாணங்களெட்டுளவாமன்றே. (௨௦)

கடமுதலாமவற்றினதுகாண்கைதானே
காட்சிபுகையாலங்கிஞானமனுமானந்
திடமருவுமவ்வனுமானம்பதிஞையேது
திட்டாந்தமெனுமங்கமுடைத்தவற்றுட்பதிஞை
யிடமலைவெவ்வழலுடைத்தென்பதுபுகையுண்மையினா
லெனலேதுமடைப்பளிபோலென்பதுதிட்டாந்த
முடைமையுணராத்தனுரையானதிதீராதி
யுறுகனியாதிகளுண்மைஞானமாகமமாம். (௨௧)

பகற்பொழுதுண்ணானொருவனிளையாமைகண்டு
பரிந்திரவுண்கற்பித்தல்காணருத்தாபத்தி
யகத்தினிலையுறுதேவதத்தனெனிலிருப்ப
னவன்வேறோரிடத்திலெனத்தெரிந்திடுதறன்னைத்
தகப்பெரியர்கேள்வியருத்தாபத்தியென்பர்
தகும்பசுவோடொக்குமரையெனுமொழிகேட்டிருந்தோன்
புகப்படரும்வனத்திலதன்விடயஞானந்தான்
பொருந்துதலேயுவமானப்பிரமாணமாகும். (௨௨)

டன்னிலொருநூறெனுமெண்ணுண்டெனுஞானந்தான்
சம்பவமாமிம்மரத்தினியக்கனுளனென்னுஞ்
சொன்னிகழ்வில்வருமியக்கவிடயவுணர்வதனைச்
சொற்றிடுவரறிஞரைதிகமாகுமளவை
யென்னவிவண்டொகுத்துரைத்தகாட்சிமுதலாய
வெண்வகையிற்சமயர்கொளவின்னவெனவுரைப்பாம். (உங)

புகலுலகாயுதனுக்குக்காட்சியொன்றேசயின
புத்தவைசேடியர்கடமக்கிரண்டனுமானத்தோ
டுகலருஞ்சாங்கியர்க்குமூன்றுரையொடுநான்குவமை
யொடுநியாயர்க்கருத்தாபத்தியொடைந்தாகு
மிகுபிரபாகரற்காறுமபாவமொடுபாட்ட
வேதாந்திகட்காகுமெனவறிசதெரிவுற்
றிகலருமொண்புராணிகர்கடமக்களவையெட்டா
மென்றுரைப்பர்சம்பவவைதிகங்களுடனன்றே. (உச)

திருந்தியவேதாந்தநூலியம்புறுவிருக்குத்
திரிசயமென்றிருபொருளங்கவற்றின்முதற்றிருக்கில்
வரைந்திடுவசுவகதந்தன்சாதிவிசாதிகளா
மற்றவைமூன்றினுக்குமுதாரணமுறையேமொழியில்
விரிந்தநிழறருநெடும்பூம்பணைமரமொன்றிற்கு
ஞிமிறினங்கள்புக்குமுகத்துழுதுபெருகுறுதே
னிருந்துநறுமலர்முதலாயினவும்வேறுள்ள
வணிமரமுங்கன்முதலாயினவும்போலாமால். (உரு)

நிரவய[illegible]மாதலினானுஞ்சத்துவேறு
நிசழாமையானுமிறைதனக்குமுதனடுவின்
றொருவுறுகவிவ்வுலககாரணமாமாயை



வரைவுதருசித்திரிகன்சித்திரசத்தியைப்போன்
மாயையுஞ்சன்மாத்திரமாம்பிரமத்தின்வேறாய்த்
தெரிவதிலாமையினென்றுஞ்சச்சிதானந்த
சிவத்தினுக்குவிசாதியில்லையென்றுணர்கதெரிந்தே. (உசு)

சுருதியினுளேகமேவாத்துவிதமென்னுஞ்
சொற்கிடையுளேகமெனுஞ்சொல்லதனுக்கயிக்க
மரிதிலுணரேவவெனுமிடைச்சொற்குத்தேற்ற
மத்துவிதமெனுமொழிக்குத்துவிதவிலக்காகக்
கருதுபொருள்வருதலினாலிம்முறையேமாயா
கற்பனைகள்கடந்துநிரவயமாகியென்றுந்
திரிதலில்சின்மயமாகுமொருபிரமந்தனக்குத்
தெரித்தசுவகதமுதலாயினமூன்றுமில்லையே. (உஎ)

அத்தியாரோபமபவாதமெனவிரண்டா
யறைகுவர்கற்பிதமத்தியாரோபமுள்ள
சுத்தியூடிலாதவிரசிதம்விளைத்தல்போலச்
சொல்பிரமசத்தினில்லாவுலகதுகற்பித்த
லெய்த்திதுதான்வெள்ளியதன்றிப்பியெனல்போலோர்ந்
திறைமெய்பொய்யுலகமெனத்தெளிதலபவாத
மெய்த்தபொருளறியுமிலக்கணைமூன்றுமவைதாம்
விளங்கதத்துவாவிருத்திதடத்தமொடுசொருபம். (உஅ)

ஆகமுதலனநியதிசெய்துநின்ற
வாருயிரையறிவித்தலதத்துவாவிருத்தி
சாகைநுனிமதியுளதென்றுணர்த்தலிற்பூதாதி
சகமாயகாரணங்கொண்டறிவுணர்த்தல்தடத்த
மாகனலிவிளங்குகதிர்ச்சொருபனெனல்போலான்

வாழிதங்குருபரன்மெய்ப்பத்தரானவர்
வாழிமறைதுணிபொருள்சித்தித்துவாழ்பவர்
வாழிபரமானந்தந்தித்திக்கவாழ்பவர்
வாழிசொரூபானந்தன்தத்துவப்பிரகாசனே. (௨௦)

தோத்திரமாகிய குணலெவாழ்த்து முற்றிற்று.

ஆசத்திருவிருத்தம் - ௪௧௩.

---

வெண்பா.

தரணிபுகழ்தத்துவனார்தாமுரைத்தஞானப்
பரணிதனைக்கட்டவிழ்த்துப்பார்த்தாற் - கரணமுடன்
சேர்ந்துமணவாதசிவமணமேபூரித்த
சாந்தமணநாறுமேதான்.

அஞ்ஞவதைப்பரணி முற்றுப்பெற்றது.

---

---

அஞ்ஞவதைப்பரணி.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௮ | ௧௪ | ௧ | லகற | லற. |
| ௧௦ | ௩ | ௩ | சுடுதி | சுடுதீ. |
| ௧௯ | ௨ | ௪ | கழற்ற | கழற. |
| ௨௧ | ௮ | ௨ | னனனு | னனலு. |
| ௨௫ | ௯ | ௨ | லுகா | லுருகா. |
| ௨௭ | ௧ | ௩ | டடருளி | டருளி. |
| ௨௮ | ௧௦ | ௨ | மலர்பா | மலர்ப்பா. |
| ,, | ௧௧ | ௩ | வாழ்தி | வாழ்த்தி. |
| ௨௯ | ௪ | ௨ | தனத்கிஞ | தனத்திஞ. |
| ௩௨ | ௪ | ௧ | தரி | தெரி. |
| ௩௫ | ௧௦ | ௧ | லவஞ | லவஞ. |
| ,, | ௧௫ | ௧ | அறன் | அறம். |
| ௩௮ | ௧ | ௧ | ஒரு | ரேரு. |
| ௩௯ | ௧௪ | ௪ | மூள்ளவு | மூள்ளளவு. |
| ௪௪ | ௭ | ௧ | தங்தளுங் | தங்களுங். |
| ௪௫ | ௧௦ | ௬ | குணஒரு | குணமொரு. |
| ௪௬ | ௨௧ | ௨ | குரம்பி | குரம்பை. |
| ௫௧ | ௪ | ௨ | மனை | மனை. |
| ௫௩ | ௩ | ௧ | யென்னை | யென்ன. |
| ,, | ௬ | ௨ | முசறு | முறுச. |
| ௫௬ | ௨௦ | ௧ | குஙசை | குஙயை. |
| ௫௭ | ௪ | ௩ | செல்வ | செல்வமு. |
| ,, | ௫ | ௨ | இத்த | இந்த. |

பரிசோதன பத்திரம்.

# அஞ்ஞவதைப் பரணி.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை | | திருத்தம். |
|---|---|---|---|---|---|
| ௰௧ | ௰௨ | ௧ | பெறுத்த | ... | பெருத்த |
| ௰௮ | ௧ | ௨ | துநா | ... | திறு |
| ௰௯ | ௨ | ௸ | கொன் | ... | கென் |
| ௸ | ௩ | ௸ | ஞெ | ... | ஞே |
| ௨௯ | ௯ | ௸ | மிகம | ... | மிகவ |
| ௩௧ | ௮ | ௧ | முருவு | ... | முருகு |
| ௸ | ௰ | ௨ | தொர் | ... | தோர் |
| ௩௯ | ௰ | ௧ | மொன் | ... | மென் |
| ௪௧ | ௨௮ | ௸ | றும் | ... | று |
| ௪௨ | ௩௧ | ௨ | வங்ச | ... | வ்ங்கிச |
| ௪௩ | ௪ | ௧ | டரு | ... | டறு |
| ௪௫ | ௰௧ | ௸ | யும் | ... | மாய |
| ௪௯ | ௪௩ | ௸ | ச்தா | ... | ற்ரு |
| ௫௧ | ௩ | ௸ | டீனு | ... | டினு |
| ௸ | ௸ | ௸ | வொ | ... | வோ |
| ௸ | ௫ | ௸ | சூழு | ... | சூழ |
| ௫௭ | ௯ | ௸ | இ ; த | ... | இந்த |
| ௫௮ | ௰௫ | ௸ | வான | ... | வால |
| ௸ | ௰௯ | ௨ | மிலத | ... | மிலர |
| ௬௮ | ௭ | ௧ | தொர் | ... | தோர் |
| ௬௯ | ௪ | ௨ | மாதே | ... | மாவே |
| ௭௫ | ௰௪ | ௸ | முடியி | ... | முடிவி |

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ - தாண்டவராயசுவாமிகள் அருளிச்செய்த

# கைவல்யநவநீதம்

## மூலம்.

இஃது

சமிவனக்ஷேத்திரமென்னுங்கோயிலூர்

**ஸ்ரீ-முத்துராமலிங்க சுவாமிகளின்**

ஆதீனத்திற்குரிய

**ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்**

மாணாக்கர்களிலொருவராகிய

**அ - இராமசுவாமிகளால்**

கோயிலூர் ஏட்டுப்பிரதிப்படி

பரிசோதித்து

சென்னை:

மிமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கைவல்யநவநீதம்

## மூலம்.

---

### தத்துவவிளக்கப்படலம்.

பொன்னிலமாதராசை பொருந்தினர்பொருந்தாருள்ளந்
தன்னிலந்தரத்திற்சீவ சாக்ஷிமாத்திரமாய்நிற்கும்
எந்நிலங்களினுமிக்க வெழுநிலமவற்றின்மேலாம் (௧)
நன்னிலமருவுமேக நாயகன்பதங்கள்போற்றி.

ஈன்றளித்தழிக்குஞ்செய்கைக் கேதுவாமயனுய்மாலாய்
ஆன்றவீசனுமாய்த்தானே யனந்தமூர்த்தியுமாய்நிற்கும்
மூன்றமுத்தனுமாயின்பப் புணரியாதவனுய்நாளும்
தோன்றியவிமலபோதசொரூபத்தைப்பணிகின்றேனே. (௨)

எவருடையருளால்யானே யெங்குமாம்பிரமமென்பா[illegible]ல்
கவருடைப்புவனமெல்லாங் கற்பிதமென்றறிந்து
சுவரிடைவெளிபோல்யானென் சொரூபசுபாவமானேன் (௩)
அவருடைப்பதுமபாத மனுதினம்பணிகின்றேனே.

என்னுடைமனதுபுத்தி யிந்தியசரீரமெல்லாம்
என்னுடையறிவினுலே யிரவிமுன்னிமமேயாக்கி
என்னுடைநீயுநானு மேகமென்றைக்கியஞ்செய்ய
என்னுடைக்குருவாய்த்தோன்று மீசனையிறைஞ்சினேனே.

அந்தமுநடுவுமின்றி யாதியுமின்றிவான்போற்

பந்தமும்வீடுங்காட்டப் பரந்தநூல்பார்க்கமாட்டா
மந்தருமுணருமாறு வ த்தத்துவஞ்சொல்வனே. (௫)

படர்ந்தவேதாந்தமென்னும் பாற்கடன்மொண்டுமுன்னூற்
குடங்களினிறைத்துவைத்தார் குரவர்களெல்லாங்காய்ச்சிக்
கடைந்தெடுத்தளித்தேனிந்தக் கைவல்யநவநீதத்தை
அடைந்தவர்விடயமண்டின் றலைவரோபசியிலாரே. (௬)

முத்தனைவேங்கடேச முகுந்தனையெனையாட்கொண்ட
கர்த்தனைவணங்கிச்சொல்லுங் கைவல்யநவநீதத்தைத்
தத்துவவிளக்கமென்றுஞ் சந்தேகந்தெளிதலென்றும்
வைத்திருபடலமாக் வகுத்துநாசெய்கின்றேனே. (௭)

நித்தியவனித்தியங்க ணிண்ணயந்தெரிவிவேகம்
மத்தியவிகபரங்கள் வருபோகங்களினிராசை
சத்தியமுணாக்கவேண்டுஞ் சமாதியென்றாறுகூட்டம்
முத்தியைவிரும்புமிச்சை மொழிவர்சாதனமிந்நான்கே. (௮)

சமந்தமம்விடல்சகித்தல் சமாதானஞ்சிரத்தையாறும்
சமமகக்கரணதண்டர் தமம்புறக்கரணதண்டம்
அமர்தருகருமம்பற்று றுத்தலேவிடலென்றாகும்
மமர்செயுங்காமமாதி வரினடக்குதல்சகித்தல். (௯)

சிரவணப்பொருளைத்தானே சித்தஞ்சிந்திக்குமாறு
சரதமா வைக்குமித்தைச் சமாதானமென்பர்மேலோர்
பரமசற்குருநூலன்பு பற்றலேசிரத்தையாகும்
விரவிருசமாதியாறு வகையின்சொற்பொருளிதாமே. (௧௦)

சாதனமின்றியொன்றைச் சாதிப்பாருலகிலில்லை





நூதனவிவேகியுள்ள நுழையாது நுழையுமாகிற்
பூதசென்மங்கள்கோடி புனிதனும்புருடனாமே. (௧௧)

இவனதிகாரியானே னிந்திரியங்களாலும்
புவனதெய்வங்களாலும் பூதபௌதிகங்களாலும் [பிப்
தவனமூன்றடைந்துவெய்யிற் சகித்திடாப்புழுப்போல்வெம்
பவமறுஞானதீர்த்தம் படிந்திடப்பதறினானே. (௧௨)

ஆனபின்மனைவிமக்க ளர்த்தவேடணைகண்மூன்றிற்
கானவர்வலையிற்பட்டுக் கைதப்பியோடுமான்போல்
போனவன்வெறுங்கையோடே போகாதவண்ணஞ்சென்று
ஞானசற்குருவைக்கண்டு நன்றாகவணங்கினானே. (௧௩)

வணங்கிநின்றழுதுசொல்வான் மாயவாழ்வெனுஞ்சோ
கத்தால், உணங்கினேனையனேயென் னுள்ளமேகுளிரும்வ
ண்ணம், பிணங்கியகோசபாசப் பின்னலைச்சின்னமாக்கி, இ
ணங்கியகுருவேயென்னை யிரக்ஷித்தல்வேண்டுமென்றான்.()

அன்னதன்கிசுவையய னைமீன்பறவைபோலத்
தன்னகங்கருதிநோக்கித் தடவிச்சன்னிதியிருத்தி
உன்னதுபிறவிமாற்று முபாயமொன்றுண்டுசொல்வேன்
சொன்னதுகேட்பாயாகிற் றொடர்பவந்தொலையுமென்றான்.

தொடர்பவந்தொலையுமென்று சொன்னதைக்கேட்ட போ
தடமடுமூழ்கினன்போற் சரீரமுங்குளிர்ந்துள்ளாறி [தே
அடருமன்பொழுகுமாபோ லானந்தபாஷ்பங்காட்டி
மடன்மலர்ப்பாதமீண்டும் வணங்கிநின்றீதுசொல்வான். ()

சொன்னதுகேட்கமாட்டாத் தொண்டனானலும்சுவாமி

உன்னதுபிறவிமாற்று முபாயமொன் றுண்டென்றீரே
இன்னதென் றதைநீர்காட்டி யீடேற்றல்வேண்டுமென்றான்.

அடங்கியவிருத்தியானென் றறிந்தபின்செறிந்தமண்ணின்
குடம்பையுட்புழுமுன் னூதுங் குளவியின்கொள்கைபோலத்
தொடங்கியகுருவுமான்ம சொரூபமேமருவவேண்டி
உடம்பினுட்சீவனைப்பார்த் துபதேசமோதுவரோ. (கஅ)

வாராயென்மகனேதன்னை மறந்தவன்பிறந்திறந்து
தீராதசுழற்காற்றுற்ற செத்தைபோற்சுற்றிச்சுற்றிப்
பேராதகாலநேமிப் பிரமையிற்றிரிவன்போதம்
ஆராயுந்தன்னைத்தானென் றறியுமவ்வளவுந்தானே. (கக)

தன்னையுந்தனக்காதாரத் தலைவனையுங்கண்டானேல்
பின்னையத்தலைவன்றானாய்ப் பிரமமாய்ப்பிறப்புத்தீர்வன்
உன்னைநீயறிந்தாயாகி லுனக்கொருகேடுமில்லை
என்னைநீகேட்கையாலே யீதுபதேசித்தேனே. (உ0)

என்னைத்தான்சடனுவுள்ளத் தெண்ணியோசொன்னீரையா
தன்னைத்தானறியாமாந்தர் தரணியிலொருவருண்டோ
பின்னைத்தானவர்களெல்லாம் பிறந்திறந்துழலுவானேன்
நின்னைத்தானம்பினேற்கு நிண்ணயமருளுவீரே. (உக)

இன்னதுதேகந்தேகி யிவனெனவுணர்வின்யாவன்
அன்னவன்றன்னைத்தானென் றறிந்தவனாகுமென்றார்
சொன்னபின்றேகியாரித் தூலமல்லாமலென்றான்
பின்னதுகேட்டவையர் பிழையுநகையுங்கொண்டார். (உஉ)

தேகமல்லாமல்வேறே தேகியார்காணேனென்றாய்



சோகமாங்கனவுதோன்றாச் சுழுத்திகண்டவனார்சொல்வா
யாகநீநனவிலெண்ணு மறிவுதானேது சொல்வாய். (உ௩)

நனவுகண்டதுநான்கண்ட நனவுளநினைவுநீங்கிக்
கனவுகண்டதுஞ்சுழுத்தி கண்டதும்வேறென்றேபோல்
தினமனுபவிப்பதொக்குந் தெரியவுமில்லை சற்றே
மனதினிலுதிக்கும்பின்னே மறைக்குமதருளுவீரே. (உச)

தூலத்தின்மரங்கள்காட்டித் தனிப்பிறைகாட்டுவார்போல்
ஆலத்தினுடுக்கள்காட்டி யருந்ததிகாட்டுவார்போல்
தூலத்தைமுன்புகாட்டிச் சூக்குமசொரூபமான
மூலத்தைப்பின்புகாட்ட முனிவரர்தொடங்கினாரே. (உரு)

அத்தியாரோபமென்று மபவாதமென்றுஞ்சொல்லும்
யுத்தியாற்பந்தம்விடென் றுரைக்கும்வேதாந்தமெல்லாம்
மித்தையாமாரோபத்தாற் பந்தமாமபவாதத்தால்
முத்தியாமிவ்விரண்டின் முந்தியாரோபங்கேளாய். (உசு)

ஆரோபமத்தியாசங் கற்பனையாவவெல்லாம் [தல்
மோரோர்வ[illegible]துவினில்வேறே யோரோர்வ[illegible]துவினையோர்
காளுடுபணியாய்த்தோன்ற னரனுகித்தறியிற்றோன்ற
னீளுடுகானற்றோன்ற னிறந்தலம்வெளியிற்றோன்றல். (உஎ)

இப்படிப்போ[illegible]லநாம ரூபங்களிரண்டுமின்றி
ஒப்பமாயிரண்டற்றொன்று புணர்வொளிநிறைவாய்நிற்கும்
அப்பிரமத்திற்றோன்று மைம்பூதவிகாரமெல்லாம்
செப்புகற்பனையினாலே செனித்தவென் றறிந்துகொள்ளே. ()

அதுதானெப்படியென்றக்கா லனாதியாஞ்சீவரெல்லாம்

இதுகாலதத்துவப்பே ரீசனுட்பார்வையாலே
முதுமூலசுபாவம்விட்டு முக்குணம்வியத்தமாமே. • (௨௯)

உத்தம வெளுப்புச்செம்மை யுரைத்திடுகறுப்புமாகும்
சத்துவகுணத்தினோடு ரஜோகுணந்தமோகுணந்தான்
சுத்தமோடழுக்கிருட்டா ச் சொல்லுமுக்குணமுமூன்றாய்
ஒ[illegible]த்துள[illegible]னுந்தம்மு ளொருகுணமதிகமாமே. (௩௦)

ஒருவழியிதுவாமித்தை யொருவழிவேறு ச்சொல்வர்
மருவுமவ்வியத்தந்தானே மகதத்வமாகுமந்த
அருண்மகதத்துவந்தா னகங்காரமாகுமென்றுங்
கருவகங்காரமூன்று க் காட்டியகுணமாமென்றும். (௩௧)

இக்குணங்களிலேவிண்போன் றிருக்குஞ்சிற்சாயைதோன்
முக்குணங்களினுந்தூய்தா முதற்குணமாயையாகும் [றும்
அக்குணப்பிரமச்சாயை யந்தரியாமிமாயை
எக்குணங்களும்பற்றாதோ னிமித்தகாரணனாமீசன். (௩௨)

ஈசனுக்கிதுசுழுத்தி யிதுவேகாரணசரீரம்
கோசமானந்தமாகுங் குணமிராசதமவித்தை
தேசறுமவித்தைதோறுஞ் சிற்சாயைசீவகோடி
காசமாமுயிர்க்கப்போதுநாமமும்பிராஞ்ஞனுமே. (௩௩)

அழுக்கொடுபற்றுஞ்சீவர்க் கதுவேயானந்தகோசம்
சுழுத்திகாரணசரீரஞ் சொன்னதிம்மட்டுமோக
முழுக்குணத்திரண்டால்வந்த மூலவாரோபஞ்சொன்னோம்
வழுத்துசூக்குமவாரோப வழியுநீமொழியக்கேளாய். (௩௪)

ஏமமாயாவினோதவீசனருளினாலே



தாமதகுணமிரண்டு சத்தியாய்ப்பிரிந்துதோன்றும்
வீமமா[illegible]முடலென்றும் விவிதமாந்தோற்றமென்றும். (௩௫)

தோற்றமாஞ்சத்திதன்னிற் சொல்லியவிண்ணும்விண்ணிற்
காற்றதாங்காற்றிற்றீயாங் கனலினீர்நீரின்மண்ணும்
போற்றுமிவ்வைந்துநொய்ய பூதங்களென்றுபேராம்
சாற்றுமற்றிவற்றிற்போக சாதனதனுவுண்டாகும். (௩௬)

ஆதிமுக்குணமிப்பூத மடங்கலுந்தொடர்ந்துநிற்கும்
கோதில்வெண்குணத்திலைந்து கூறுணர்கருவியாகும்
ஓதியபின்னையைந்து மூளம்புத்தியிரண்டாஞான
சாதனமாமிவ்வேழுஞ் சற்குணப்பிரிவினாலே. (௩௭)

இராசதகுணத்தில்வேறிட் டெடுத்தகூறைந்துமைந்தும்
பிராணவாயுக்களென்றும் பெருந்தொழிற்கருவியென்றும்
பராவியபெயராமிந்தப் பதினேழுமிலிங்கதேகம்
சுராசுரர்நரர்விலங்காய்த் தோன்றியவுயிர்கட்கெல்லாம். ()

இவ்வுடன்மருவுஞ்சீவ னிலங்குதைசதனென்றுவன்
இவ்வுடன்மருவுமீச னிரணியகர்ப்பனவன்
இவ்வுடலிரண்டுபேர்க்கு மிலிங்கசூக்குமசரீரம்
இவ்வுடற்கோசமூன்று மிதுகனவவத்தையாமே. (௩௯)

சூக்குமசடமிம்மட்டுஞ் சொல்லினோமிப்பாற்றூலம்
ஆக்குமாரோபந்தானு மடைவினின்மொழியக்கேளாய்
தாக்குமிவ்வுயிர்க்குத்தூல தனுவும்போகமுமுண்டாகக்
காக்குமவ்வீசன்பஞ்சீ கரணங்கள்செய்தானன்றே. (௪௦)

ஐந்துபூதமும்பத்தாக்கி யவைபாதி[illegible]

வந்த தூலபூத மகாபூதமிற்றினின்றுந்
தந்த நான்காந்தூல தனுவண்டபுவனபோகம். (சுக)

தூலமேமருவுஞ்சீவன் சொல்லியவிசுவனுகும்
தூலமேமருவுமீசன் சொல் விராட்புருடனுகும்
~~தூலசாக்கிரவவஸ்தைதை சொன்னமேதாரன்னகோசம்~~
தூலகற்பனையிதென்று தொகுத்ததுமனத்திற்கொள்வாய்.

சீரியவீசனுர்க்குஞ் சீவர்க்குமுபாதியொன்றேல்
ஆரியகுருவேபேத மறிவதெப்படியென்றக்கால்
காரியவுபாதிசீவன் காரணவுபாதியீசன்
வீரியமிகுசமட்டி வியட்டியாற்பேதமாமே. (சுங)

மரங்கள்போல்வியட்டிபேதம் வனமெனல்சமட்டிபேதம்
சரங்கடாவரங்கள்பேதத் தனியுடல்வியட்டியென்பார்
பரம்பியவெல்லாங்கூட்டிப் பார்ப்பதே சமட்டியென்பார்
இரங்கியபலசீவர்க்கு மீசர்க்கும்பேதமீதே. (சுச)

கற்பனைவந்தவாறு காட்டினேங்காண்பவெல்லாஞ்
சொற்பனம்போலுமென்றே துணிந்தவன்ஞானியாவன்
செற்புதைமழைக்காலம்போய்த் தெளிந்தவாகாசம்போல
அற்புதமுத்திசேரு மபவாதவழியுங்கேளாய். (சுரு)

அரவன்றுகயிறென்றூற்போ லாளன்றுதறியென்றூற்போற்
குரவன்சொல்லுபதேசத்தாற் கூறுநூன்முறையிற்கொண்டு
புரமன்றுபுவனமன்று பூதங்களன்றுஞானத்
திரமென்னும்பிரமமென்று தெளிவதேயபவாதங்காண். ()

குடமுநாலும்பொற்செய்த பணியும்பொன்னும்போற்பார்க்



உடன்முதற்சுபாவமீரு வொன்றிலொன்றுதித்தவாறே
அடைவினிலொடுக்கிக்காண்ப தபவாதவுபாயமாமே. (சுஎ)

தூடணதமத்தில்வந்த தோற்றமாம்சத்திசெய்யு
மேடணைவிகாரஞ்சொன்னீ ரிரண்டுசத்திகளென்றீரே
மூடலாஞ்சத்திசெய்யு மோகமும்சொல்லுமையா
கேடறக்குருவேயென்னக் கிருபையோடருள்வாரே. (சுஅ)

தானிகர்தனக்காமீசன் றனையுந்தங்களைத்தான் கண்ட
ஞானிகடமையுமன்றி நாஸ்திநபாதியென்னும்
ஊனிடையுயிர்களுள்ளித்துணர்விழிகுருடாம்வண்ணம்
வானிலந்திசைகண்மூடு மழைநிசியிருள்போன்மூடும். (சுகூ)

பூன்றமாம்பிரமத்துக்கும் புறத்துளவிகாரங்கட்கும்
ஆன்றகூடஸ்தனுக்கு மகத்துளவிகாரங்கட்கும்
தோன்றியபேதஞ்சற்றுந் தோன்றுமன்மறைத்துமூடும்
ஊன்றியபவவியாதி யுண்டாக்குமுபாதியீதே. (எ௦)

ஆதாரமறைந்துபோனு லாரோபமெங்கேதோன்றும்
ஆதாரமறையாதாகி லாரோபமிலையேயென்றல்
ஆதாரஞ்சமம்விசேட மாமெனவிரண்டுகூறும்
ஆதாரஞ்சமமாமெங்கு மாரோபம்விசேடமாமே. (எக)

சகமதில்துவென்சுட்டாஞ் சமானந்தான்மறைந்திடாது
மிகவிதுகயிறென்னும் விசேடந்தான்மறைந்துபோகும்
அகமெனுஞ்சமானந்தன்னை யஞ்ஞானமறைத்திடாது
பகர்விசேடமதாஞ்சீவன் பரமெனுமதனைமூடும். (எஉ)

கேவலநிலைதோன்றுமற் கெடுத்ததுபஞ்சகோசஞ்

கைவல்யநவநீதம்.

ஆவரணந்தானேபா ழுணர்த்தமென் றுரைத்ததேதோ
மேவருங்குருவேயென்று வினவின்மகனேகேளாய். (ருங)

தோற்றமாஞ்சத்திதானுந் துன்பமாம்பவமானாலும், ஆ
ற்றலான்முத்திசேர்வார்க் கனுகூலமாகுங்காணி, ஊற்றமா
ய்பகற்காலம்போ லுபகாரியா னுண்டோ, மாற்றமென்
னுரைப்பேன்மைந்தாமறைப்பதுமிகப்பொல்லாதே. (ருச)

சுழுத்தியிற்பிரளயத்திற் றோற்றமாஞ்சகங்கண்மாண்டும்
அழுத்தியபவம்போய்முத்தி யடைந்தவரொருவருண்டோ
முழுத்தவிக்ஷேபமெல்லா முத்தியிற்கூட்டுகிற்கும்
கொழுத்தவாவரணமுத்தி கூடாமற்கெடுத்தகேடே. (ருரு)

சுத்தியில்வெள்ளிபோலத் தோன்றியதோற்றமான
சத்தியும்பொய்யேயென்றாற் சத்திசாதனமாய்வந்த
முத்தியும்பொய்யாமென்னின் மோகநித்திரைவிலங்கால்
நித்திரைதெளியுமாபோ னிருவாணநிலைமெய்யாமே. (ருசு)

இம்பரினஞ்சைநஞ்சா லிரும்பினையிரும்பாலெய்யும்
அம்பினையம்பாற்பற்று மழுக்கினையழுக்கான்மாய்ப்பர்
வம்பியன்மாயைதன்னை மாயையான்மாய்ப்பர்பின்னைத்
தம்பமாமதுவுங்கூடச் சவஞ்சுடுதடிபோற்போமே. (ருஎ)

இந்தமாயையினாற்சீவர்க் கேழவத்தைகளுண்டாகும்
அந்தவேழவத்தைதம்மை யடைவினின்மொழியக்கேளாய்
முந்தவஞ்ஞானமுடன் முளைத்தல்காணுந்தஞானம்
சந்தேகங்கண்டஞானந் தழல்கெடல்குளிர்மையாதல். (ருஅ)

பிரமமார்த்தனைமறந்த பேதைமையேயஞ்ஞானம்



நரனொருகருத்தாற்சீவ னானெனமுளைத்தலாற்றம் [னம்
குரவன்வாக்கியத்தாற்றன்னைக் குறிக்கொளல்பரோக்ஷஞா

தத்துவவிசாரஞ்செய்து சகலசந்தேகமும்போய்
அத்துவிதந்தானாத லபரோக்ஷஞானமாகும்
கர்த்தனுஞ்சீவபேதங் கழிவதேதுக்கம்போகல்
முத்தனாயெல்லாஞ்செய்து முடிந்ததானந்தமாமே. (சு௦)

இதுநினக்கறியும்வண்ண மிப்படியொருதிட்டாந்தம்
புதுமையாங்கதைகேள்பத்துப் புருடோராற்றைநீந்தி
உதகதீரத்திலேறி யொருவனொன்பதுபேரெண்ணி
யதனொடுதசமன்றானென் றறியாமன்மயங்கி[illegible]. (சுக)

அறியாதமயலஞ்ஞான மவனில்லைக்காணேமென்றல்
பிறியாவாவரணமாகும் பிழைகொண்டழல்விக்ஷேபம்
நெறியாளன்றசமனுண்டு நிற்கின்றானென்றசொல்லைக்
குறியாகவெண்ணிநெஞ்சிற் கொள்வதுபரோக்ஷஞானம். ()

புண்ணியபதிகன்பின்னும் புருடரொன்பதின்மர்தம்மை
எண்ணு நீ தசமனென்னவேதன்னைக்காணல்
கண்ணினிற்கண்டஞானங் கனைதல்போவதுநோய்போகல்
தின்னியமனதிலையந் தெளிதலானந்தமாமே. (சுஉ)

[illegible]தசபுமான்றனைக்கண்டாற்போற் சிறந்திருமூர்த்தியேயென்
நிசவடிவினையான்காண நீர்காட்டல்வேண்டுமென்றான்
சுசிபெறுமில[illegible]யார்த்தந் துவம்பதந்தற்பதங்கட்
கசிபதனைக்கியஞ்செய்யு மதுசெயுமுண்மைகேளாய். (சுச)

விண்ணென்றைமகாவின்னென்ற மேகவின்னென்று

ணென்றும், எண்ணுங்கற்பனைபோலொன்றே யெங்குமாம்
பிரமமீசன், நண்ணுங்கூடஸ்தஞ்சிவனுன்குசைதன்னியமாகும்

பூச்சியவீசன்சீவன் புகல்பதமிரண்டினுக்கும்
வாச்சியமில‌ட்சியந்தான் மலமிலாப்பிரமமான்மா
காய்ச்சியபாலினெய்போற்கலந்தொன்றுங்கடைந்தெடுக்கும்
ஆச்சியமென்னவுன்னை யறிந்துநீபிறிந்துகொள். (௬௬)

பிறிவதெப்படியென்றக்காற் பிணமாகுமுடனுனென்னும்
அறிவினைக்கொல்லல்வேண்டு மைம்பூதவிகாரமன்றோ
வெறியதோர் துருத்திமூக்கின் விடுவதுபோலுன்மூக்கால்
எறிபிராணனுமேயல்லை யிராசதகுணவிகாரம். (௬௭)

காரணமாமனதுபுத்தி கருத்தாவாமவையான்மாவோ
தாமுளவிரண்டுகேர்சஞ் சத்துவகுணவிகாரம்
வரமறுதுயிலானந்த மயனையுநானென்றதே
விரவியதமவஞ்ஞான விருத்தியின்விகாரமாமே. (௬௮)

சத்தொடுசித்தானந்தஞ் சமந்திரஞ்சாக்ஷியேகம்
நித்தியம்வியாபியான்மா நீயதுவாவதிந்து
பொத்தொடுசடந்துக்காதி பொருந்துபேதங்களான
குத்திரபஞ்சகோசக் குகைவிட்டுவெளியிலாவாய். (௬௯)

பஞ்சகோசமும்விட்டப்பாற் பார்க்கின்றபொழுதுபாழே
விஞ்சியதுவல்லாமல் வேறொன்றுந்தெரியக்காணேன்
அஞ்சனவிருளையோநா னகமெனவனுபவிப்பேன்
வஞ்சமில்குருவேயென்ற மகன்மதிதெளியச்சொல்வார். ()

[illegible]மன்பத்தி மோகத்தாலெண்ணியெண்ணி



பின்பவனிடையிற்கண்ட பெரியபாழவனோபாராய்
அன்புளமகனேகாண்ப தடங்கலுங்காண்பானீயே. (௭௧)

தூலஞ்சூக்குமவஞ்ஞானந் தோன்றுமுன்றவத்தைதாமுங்
காலமோர்மூன்றஞ்சன்மக் கடலெழுங்கல்லோலங்கள்
போலவேவந்துவந்து போனவெத்தனையென்பேனுன்
ஆலமர்கடவுளானை யனைத்துகொலாஞ்சாக்ஷிநீயே. (௭௨)

எல்லாங்கண்டறியுமென்னை யேதுகொண்டறிவேனென்று, சொல்லாதேசுயமாஞ்சோதிச் சுடருக்குச்சுடர்வேறுண்டோ, பல்லார்முன்றசமன்றன்னைப்பார்ப்பதுந்தனைக்கொண்டேதான், அல்லாமற்பதினொன்றுனுமவனிடத்துண்டோ பாராய். (௭௩)

அறிவுக்குமறிவுசெய்யு மறிவுவேறுண்டென்றெண்ணும்
அறிவற்றகுதர்க்கமூடர்க் கனவத்தைபலமாய்த்தீரும்
அறிபடும்பொருணீயல்லை யறிபடாப்பொருணீயல்லை
அறிபொருளாகுமுன்னை யனுபவித்தறிவாய்நீயே. (௭௪)

மதுரமாங்கட்டிசுட்ட மாப்பணியாரமெல்லாம்
மதுரமாக்கியவதற்கு மதுரந்தன்சுபாவமன்றோ
அதுவிதுவெனுஞ்சடங்க ளறிவாகவறிவைத்தந்தே
அதுவிதுவிரண்டுமாகா வகம்பொருளறிவாய்நீயே. (௭௫)

இந்தநீதுவம்பதத்தி னிலட்சியப்பொருளாமென்றும்
பந்தமில்பிரமமேதற் பதந்தனிலிலட்சியார்த்தம்
அந்தமாஞ்சீவனீச னவர்களேவாச்சியார்த்தம்
சந்ததம்பேதமாவார் தமக்கைக்கியங்கூடாதே. (௭௬)

பேதமானதுவுங்கேளாய் பெயராலுமிடங்களாலும்

பாதலம்விசும்புபோலப் பலராமகன் றவிற்பர்
ஆதலாலிவர்க்கொன்றாகு மைக்கியமென்பதுகூடாதே. (எஎ)

வடநூல்வல்லவர்கள்சொல்லும் வாசகப் பொருள்சேராமல்
இடராகிற்பொருளாம்வண்ண மிலக்கணையுணாயாற்கொள்
இடமானவதுமூன்றுஞ் செப்புவார்விட்டதென்றும் [வார்
விடலிலாதென்றும்விட்டு விடாததென்றும்பேராமே. ()

கங்கையிற்கோஷமென்றுங் கறுப்புச்சேப்போடுதென்றும்
தங்கியசோயந்தேவ தத்தனென்றுஞ்சொல்வார்கள்
இந்துத்தாரணங்களாக்கி இந்தமூன்றுனைகளாலே
அங்கநூல்விரோதமானசொல்லெலலாம்பொருளாந்தானே.

பன்னியசோயமென்னும் பதங்களின்வாச்சியார்த்தம்
அன்னியதேசகால மவனிவனென்பவெல்லாம்
சொன்னவிவ்விரோதம்விட்டுத் தொட ரிலக்கியம்விடாமல்
உன்னிடிற்றேவதத்தனொருவனைவெளியாக்காட்டும். (அ0)

தத்துவமெனும்பதங்கள் பிர[illegible]சொன
வத்துவைவிடாமற்பேத வாச்சியார்த்தத்தைவிட்டு
நித்தமுமதுநீயாகு நீயதுவாகுமென்னும்
அர்த்தமுமகண்டமென்றே யசிபதவைக்யங்காட்டும். (அக)

கடநீரின்மேகநீரிற் கண்டவானிரண்டும்பொய்யே
குடவானும்பெரியவானுங் கூடியொன்றுமெப்போதும்
இடமானபிரமஞ்சாக்ஷி யிரண்டுமெப்போதுமேகம்
இடமாகச்சுவானுபூதி சிவோகமென்றிருந்திடாயே. (அஉ)

தஞ்சமாங்குருவுஞ்சொன்ன தத்துவவழிதப்பாமதில்





கொஞ்சமாமிருப்பும்விட்டுக் கூடஸ்தன்பிரமமென்னு
நெஞ்சமுநழுவியொன்றாய் நின்றபூரணத்தைக்கண்டான். ()

அனுபவானந்தவெள்ளத் தழுந்தியேயகண்டமாகித்
தனுகரணங்களாதி சகலமுமிறந்துசித்தாய்
மனதுபூரணமாய்த்தேக மானசற்குருவுங்காண
நனவினிற்சுழுத்தியாகி நன்மகன்சுபாவமானான். (அச)

அளிமகனெடும்போதிவ்வா றானபின்மனதுமெள்ள
வெளியில்வந்திடவுணர்ந்தான் விமலதேசிகனைக்கண்டான்
துளிவிழிசொரியப்பாதந் தொழுதுவீழ்ந் தெழுந்துசூழ்ந்தா
குளிர்முகச்சுவாமிகேட்கக் கும்பிட்டுநின்றுசொல்வான் [ன்

ஐயனேயெனதுள்ளேநின் றனந்தசென்மங்களாண்ட
மெய்யனேயுபதேசிக்க வெளிவந்தகுருவேபோற்றி
உய்யவேமுத்திநல்கு முதவிக்கோருதவிநாயேன்
செய்யுமாறொன்றுங்காணேன் றிருவடிபோற்றிபோற்றி. ()

சிட்டனிவ்வாறு[illegible]த் தேசிகர்மகிழ்ந்துநோக்கிக்
கிட்டவாவெனவிருத்திக் கிருபையோடருளிச்செய்வார்
துட்டமாந்தடைகண்மூன்றுந் தொடராமற்சொரூபஞான
நிட்டனாயிருக்கினீதே நீசெயுமுதவியாமே. (அஎ)

நீநானென்றிரண்டிலாம னிறைந்தபூரணமாயெங்கும்
நானாகத்தெளிந்தஞான நழுவுமோகுருவேயென்றான்
தானாகும்பிரமரூபஞ் சற்குருநூலாற்றோன்றும்
ஆனாலுந்தடைகளுண்டே லனுபவமுறைத்திடாதே. (அஅ)

தடை[illegible]வையுனிலஞ்ஞானஞ் சந்தேகவிபரீதங்கள்
படர்செயுமிந்தமூன்றும் பலசன்மப்பழக்கத்தாலே

உடனுடன்வரும்வந்தக்கா லுயர்ஞானங்கெடுமிவற்றைத்
திடமுடன்கெடுப்பாய்கேட்டல் சிந்தித்தறெளிதலாலே. ()

அக்கினிகட்டுப்பட்டா லற்பமுஞ்சுடமாட்டாது
மக்கினஞானத்தாலே வந்தபந்தமும்வேவாது
சிக்கெனப்பழகிக்கேட்டல் சிந்தித்தறெளிதலாலே
விக்கினமடஞ்சந்தேகம் விபரீதம்போக்குவாயே. (கூ0)

பிரம்பாவனையைமூடிப் பேதங்காட்டுவதஞ்ஞானம்
குரவன்வாக்கியநம்பாமற் குழம்புவ தாஞ்சந்தேகந்
திரமறுசகமெய்யென்றுந் தேகநானென்றுமுள்ளே
விரவியமோகந்தானே விபரீதமென்பர்மேலோர். (சுக)

தத்துவவனுபோகந்தான் சாதித்தல்கேட்டலென்பார்
ஒத்துளபொருளுகத்தா லசாவல்சிந்தித்தலென்பார்
சித்தமேகாந்தமான தெரிசனந்தெளிதலென்பார்
நித்தமிப்படிசெய்தக்கா னிர்வாணம்பெறுவாய்நீயே. (கூஉ)

எத்தனைநாண்ஞாதாவு ஞானமுமிருக்குமுன்பால்
அத்தனைநாளும்வேண்டு மப்பாலோர்செயலும்வேண்டா
நித்தமும்வெளிபோற்பற்று ஞேயமாத்திரமாய்ச்சீவன்
முத்தரானவர்விதேக முத்திபெற்றிருப்பாரொன்றும் (கூந)

ஞானமார்சீவன்முத்தர் நால்வகையாவர்களாய்
வானிகர்பிரமவித்து வரன்வரியான்வரிட்டன்
ஆனவர்நாமமிங்கு மவர்களிற்பிரமவித்தின்
றானமுமற்றைமூவர் தாரதம்மியமுஞ்சொல்வேன். (கூச)

தீராய்ப்பிரமவித்தாய்த்தெளிந்தவர்தெளியுமுன்னம்



பாரகாரியமானாலும் பலர்க்குபகாரமாக
நேரதாச்செய்வார்தீர்ந்த நிலைவிடார்சீவன்முத்தர். (கூரு)

காமமாதிகள்வந்தாலுங் கணத்திற்போமனத்திற்பற்றார்
தாமரையிலைத்தண்ணீர்போற் சகத்தொடுங்கூடிவாழ்வார்
பாமரரெனக்காண்பிப்பார் பண்டிதத்திறமைகாட்டார்
ஊமருமாவாருள்ளத் துவகையாஞ்சீவன்முத்தர். (கூசு)

பேதகன்மத்தால்வந்த பிராரத்தநானாவாகும்
ஆதலால்விவகாரங்க ளவரவர்க்காவாகும்
மாதவஞ்செயினுஞ்செய்வார் வாணிபஞ்செயினுஞ் செய்வார்
பூதலம்புரப்பாரையம் புகுந்துண்பார்சீவன்முத்தர். (கூஎ)

சென்றதுகருதார்நாளைச் சேர்வதுநினையார்கண்முன்
நின்றதுபுசிப்பார்வெய்யி னிலவாய்விண்விழுதுவீழ்ந்து
பொன்றினசவம்வாழ்ந்தாலும்புதுமையாவொன்றும்பாரார்
நன்றுதீதென்னார்சாக்ஷி நடுவானசீவன்முத்தர். (கூஅ)

பின்னைமூவரிலிரண்டு பேர்களுஞ்சமாதியோகந்
தன்னையுற்றிருப்பார்தேக சஞ்சாரநிமித்தந்தானாய்
உன்னுவோன்வரன்வேற்றோரா லுணர்பவன்வரியானாகும்
அன்னியர்தம்மாற்றன்னா லறியாதோன்வரிட்டனாமே. (கூகூ)

அரிதாகுமிவர்களிவ்வா றனேகரானாலுமுத்தி
சரியாகும்பாடுபட்ட சமாதிக்குப்பலனேதென்றால்
பெரிதான[illegible]துக்கம் பிரமவித்தனுபவிப்பன்
வரியானும்வரனுமற்றை வரிட்டனுஞ்சுகமாய்வாழ்வார். ()

பிரமஞானிகளுங்கர்மப் பேதையர்போலேவாழ்ந்தால்

பரவுமாகாசமொன்றிற் பற்றுதுமற்றைநாலும்
விரவினதோடுங்கூடும் விதமிருவோருமாவார் (௧௦௧)

சீவன்முத்தனைச்சேவித்தோர் சிவனயனெடுமாலான
மூவருமகிழநோன்பு முழுவதுஞ்செய் துசன்ம
பாவனமானதொன்று பழமறைமுழங்குமிப்பால்.
மேவருஞ்சீவன்முத்தர் விதேகமுத்தியுநீகேளாய். (௧௦௨)

பஞ்சினையூழித்தீப்போற் பலசன்மவிவிதவித்தாம்
சஞ்சிதமெல்லாஞானத் தழல்சுட்டுவெண்ணீருக்கும்
கிஞ்சிதாகாமியந்தான் கிட்டாமல்விட்டுப்போகும்
விஞ்சினபிராரத்தத்தின் விளையனுபவித்துத்தீரும். (௧௦௩)

பொறுமையாற்பிராரத்தத்தைப் புசிக்குநாட்செய்யுகன்மம்
மறுமையிற்றொடர்ந்திடாமல் மாண்டுபோம்வழியேதென்று
சிறியவரிகழ்ந்தஞானி செய்தபாவத்தைக்கொள்வார் (ல்
அறிவுளோரறிந்துபூசித் தறமெலாங்கைக்கொள்வாரே. ()

அரியமெஞ்ஞானத்தீயா லவித்தையாமுடனீறும்
பெரியதூலமுங்காலத்தாற் பிணமாகிவிழுமந்நேரம்
உரியசூக்குமசரீர முலையிரும்புண்டநீர்போ ல்
[illegible]ரியமாய்விபுவாய்நின்ற சொரூபத்திலிறந்துபோமே. ()

கடமெனுமுபாதிபோனாற் ககனமொன்றானாற்போல
வுடலெனுமுபாதிபோன வுத்தரஞ்சீவன்முத்தர்
அடிமுடிநடுவுமின்றி யகம்புறமின்றிநின்ற
படிதிகழ்விதேகமுத்திப் பதமடைந்திருப்பனென்றும். (௧௦௬)

சொல்லியமகனேயெங்குஞ் சூழ்வெளியிருக்கமண்ணைக்



ஒல்லையாம்பிரமநாலா லுற்றதுபோலேதோன்றும்
எல்லையினுமெப்போது மேகமென்றிருந்துவாழ்வாய். (௧௦௭)

கானனீர்கிளிஞ்சில்வெள்ளி கந்தர்ப்பநகர்களூர்
வானமைகயிற்றிற்பாம்பு மலடிசேய்முயலின்கோடு
பீனமாந்தறிபுமானிற் பிரபஞ்சமெல்லாம்பொய்யே
ஞானமெய்மகனேயுன்னை நம்மாணைமறந்திடாதே. (௧௦௮)

முதலாவது

தத்துவவிளக்கப்படலம்

முற்றுப்பெற்றது.

---

## இரண்டாவது.

# சந்தேகந்தெளிதற்படலம்.

---

நார்குழிபறித்துமெள்ள நாட்டியநெடியகம்பம்
உரமுறக்குத்திக்குத்தி யுறைப்பிக்குமுபாயம்போலே
பரமசிற்சொரூபந்தன்னிற் பற்றியமனோவிருத்தி
திரநிலைபெறச்சந்தேகந் தெளிதலைமொழிகின்றேனே. (௧)

நற்கருத்துடையோனாகி ஞானவானாகிநின்றோன்
மர்க்கடநியாயம்போலே மகாபூதவிகாரந்தொட்டு
நிர்க்குணவிதேகமுத்தி நிலைபரியந்தஞ்சொன்ன
சற்குருவினைவிடாமற் சந்ததமனுசரித்தான். (௨)

சந்ததம்புருடன்றன்னைச் சாயைபோல்விடாமலன்பாம்
மைந்தனைநோக்கிச்சாக்ஷி மாத்திரமாய்நின்றாயோ
சிந்தையிலையமெல்லாந் தீர்ந்ததோதெளிவினுள்ளே
அந்தரங்கலந்ததுண்டோ வநுபவமுறைசெய்வாயே. (௩)

எனவுரைத்தருளுமாசா னிருபதம்வணங்கியெந்தாய்
சனனவன்காட்டின்மோகத் தமத்தெழுபேதப்பேய்கள்
உனதருளுதயவெற்பி லுபதேசவருக்கன்றோன்றி
மனவிழிதெரியஞான வான்கதிர்பரந்தாலுண்டோ. (௪)

மந்திரமூர்த்திதன்னான் மாற்றியபேய்போனாலும்
எந்திரமெழுதிக்கட்டி யினிவராவகைசெய்வார்போல்
முந்தியுன்னுபதேசத்தால் மோகம்போனாலுமையா



ஆகமப்பிரமாணத்தா லறியென்றும்வாக்குக்கெட்டா
தேகமகம்பிரமமென்று மிதயத்தாலுணர்வாயென்றும் [னீர்
சோகமாமனத்திற்கெட்டாச்சுயஞ் சோதியென்றுஞ்சொன்
மோகமாமிரண்டுசங்கை முளைத்தனபறித்திடீரோ. (௬)

மற்றைமுப்பிரமாணத்தால் வஸ்துநிர்ணயங்கூடாதே
உற்றதோர்விடயம்பூத முபயமன்றாதலாலே
குற்றமாங்குணவிசேடங் கூடாமலிருக்கையாலே
இற்றதுவாக்குக்கெட்டா தென்பதுமறிவாய்நீயே. (௭)

வாக்கியந்தனக்கெட்டாது வஸ்துவென்றுரைத்தவேதம்
வாக்கியவிருத்தியாலவ் வஸ்துவைக்காட்டிற்றன்றோ
வாக்கியங்களிலேமானமாவதேதென்றாயாகில்
வாக்கியமிரண்டுமெய்யே மறைகள்பொய்யாதுகேளாய். ()

தன்பதியல்லாப்பேர்க டமையல்லனல்லனென்றாள்
அன்பனைக்கேட்டநேர மவள்வெட்கிமௌனமானாள்
என்பதுபோலநீக்கி யிதன்றிதன்றெனச்சேடித்த
பின்பரப்பிரமந்தன்னைப் பேசாமற்காட்டும்வேதம். (௯)

முந்தியசங்கைதீர மொழிந்ததையறிந்துகொள்வாய்
பிந்தியசங்கைதீரப் பேசுமுத்தரநீகேளாய்
இந்தியங்களுக்கிராச னிதயமாமதியெண்ணங்கள்
புந்தியுமனமுமென்றே புறத்தகத்துலாவியாடும். (௧௦)

உன்முகம்போற்கண்ணாடிக் குள்ளொருமுகங்கண்டாற்போ
சின்மயவடிவின்சாயை சித்துப்போற்புத்திதோன்றும் [
நின்மனோவிருத்தியந்தநிழல்வழியாயுலாவும்

உருக்கியதராநீர்நாணு வுருவங்களானாற்போல
விருத்திகள்கடபடாதி விடயமாய்ப்பரிணமிக்கும்
அருப்பலவிடயமெல்லா மாபாசன்றோற்றுவிக்கும்
இருட்டினில்விளக்குங்கண்ணுமில்லாமற்பொருள்காணுதே.

எரிகின்றவிளக்காற்கண்ணு விருட்பொருள்காணல்வேண்டும், தெரிகின்றபரிதிகாணச் சென்றிடிற்கண்ணேபோதும், விரிகின்றசகத்தைக்காண விருத்தியும்பலமும்வேண்டும், புரிகின்றவிருத்தியொன்றே போதுமெய்ப் பொருள்காண்போர்க்கே. (கங)

விருத்தியும்பலமுங்கூடும் விகாரமேமனமென்பார்கள்
கருத்தெழும்விருத்திவேண்டுங் கணக்கினன்மனத்திற் கெட்டும்
வருத்தியபலமாமிந்த மனத்திற்கெட்டாதுகண்டாய்
அருத்தமிப்படியென்றைய மகன்றுநீதெளிந்திடாயே. (கச)

(வேறு.)

வஞ்சகமில்பரமார்த்தகுருவேசொன்ன வழிகளறிந்தேனினியோர் வசனங்கேளீர், சஞ்சலமற்றகண்டபூரணமாய்ச்சித்தந் ததாகாரமாவதன்றேசமாதியோகம், உஞ்சலையொத்தலைவதுதன்சுபாவமாகி யொருகணத்திற்பலவுலகா யுதிக்குமிந்த, நெஞ்சகம்வ துவிலசையாநிவாததீப நிலையடைந்ததெப்படியோ நீர்சொல்வீரே. (கரு)

கருதுமனேகுணமூன்றுமூன்றிலொன்று கதித்தெழுந்தான்மற்றிரண்டுங்கரந்துநிற்கும், தருமமிகுஞ் சத்துவமே லானபோது சன்மார்க்கமானதெய்வசம்பத்துண்டாம், மருமுந்தியுன்னுபமதசறு

யுமாகும், அருமகனேத மேலானபோதி லசுரசம்பத்துண்டாகுமறிந்துகொள்ளே. (கசா)

மனதுசத்துவசொருப மற்றிரண்டும்வந்து கலந்த
மாற்றினாற்போம், தனதுசன்மார்க்கத்தைவிடா திருந்தபோது த முஞ்சமிக்கும்பின்னைக், கனபரிணுமஞ்சலனம்போம்போனக்காற் களங்கமற்றுநின்றவாகாசம்போலும், நினதுளமப்படியாமப்பிரமத்தொன்றாய் நிருவிகற்பசமாதியிலே நிற்குந்தானே. (கஎ)

களங்கமற்றகண்ணடிதன் வேறோர் களங்கமற்றகண்ணடிகாட்டும்போது, விளங்கியதன்மயமாகியபேதமாகி விகற்பமின்றிநிருவிகற்பமானாற்போல, அளந்தறியப்படாவிடுவாய்ச்சத்தாய்ச்சித்தாயானந்தமாம்பிரமத்தைக்கியமான, உளந்தெளிந்தபடியிருந்தாலுலகமெங்கேயுலைவெங்கே யென்றுசங்கையொழித்திடாயே. (கஅ)

ஏகமாய்மனமிறந்தாற் சிவன்முத்தரிருக்குமட்டும்பிராரத்தமெதினாலுண்பார், போகமானதுபுசித்துத்தொலைப்பதன்றோபுசிப்பதென்றான்மனந்தானும்போனதன்றே, சோகமாமனமிறந்தாற்போகமில்லைதோன்றுமெனின்முத்தரொன்றுசொலக்கூடாதே, மோகமாமிதுதெளியக் குருவேநன்றாய் மொழிந்தருள்வாய்தெளிந்ததன்றோமுத்திதானே. ()

மனநாசஞ்சொரூபமென்றுமரூபமென்றும் வகுத்துரைப்பாரிருவகையாம்வருமிவற்றில், வினவாதசிவன்முத்தரிடத்திலொன்றும் விதேகமுத்தரிடத்திலொன்று மேவு, தனதானசத்துவமாய்மனஞ்சேர்த்துத் த சித்தல்சொரூபநாசம், அனகாசத்துவந்தானுமிலிங்க தேக

சுத்தமாஞ்சத்துவமே யுண்மையாகுந் துகளிருள்போ
னுன்மனமென்சொல்லும்போம்போம், வர்த்தமானத்தில்
வந்தவுணவையுண்பார் வருவதும்போவதுநினைந் துமகிழார்
வாடார், கர்த்து மகந்தையைவிட்டகர்த்தராகிக் கரண
விருத்திகளவத்தைகாண்பாராகி, முத்தராயிருக்கலுமாம்
புசிப்புங்கூடு முட்டிலையென்றறிந் துசங்கைமோசிப்பாயே.()

விவகாரவேளையெலாஞ் சமாதியென்றால் விகற்ப மன்
றோமனமலைந் துவிடாதோவிட்டால், அவதானநழுவுமன்றோ
வென்றாயாகிலதற்கொரு திர்ஷ்டாந்தங்கேளாசைகொண்
டு, நவமாகப்பர புருடன்றன்னைக்கூடிநயந்தசுகமனுபவித்த
நாரிநெஞ்சம், தவமாகமனைத்தொழில்கள்செய்யும்போதுந்
தழுவியனுபவித்தசுகந்தனைவிடாதே. (௨௨.)

தேகத்தனலனுகியகர்த்தனுகிச்சிவனின்றிப்பிரமமாய்த்
தெளிந்தமுத்தன், 'போகத்தையுண்பனென்றாற்கருத்தாவா
மேபூரணமாமகர்த்தனுக்குப்போகமுண்டோ, சோகத்தைய
றுத்தருளுங்குருவேயிந்தத்துகளறுக்கவேண்டுமென்று சொ
ன்னயர், மாகர்த்தன்மாபோகிமாத்தியாகி வகைமூன்று
யவரிருக்குமகிமைகேளாய். (௨௩)

செய்கையுஞ்செய்விக்கையுமற்றிருக்குங்காந்தச் சிலைமு
லைமுன்னிரும்புகள்சேட்டிக்குமாபோல், செய்கையுஞ்செய்வி
க்கையுமற்றிருக்கு மென்முன்செடமானவு மெலாஞ்சே
ட்டைசெய்யும், மெய்கலந்தவிந்திரியவிகாரரூபவிவகாரவிரு
த்திக்கும்விருத்திதான , மெய்கலந்தசமாதிக்குஞ்சாக்ஷியே
நான் வெயில்போலென்றுரைத்தவனே விபுமாகர்த்தன். ()

அறுசுவையின்குணங்குற்றமசுத்தஞ்சுத்த மபத்தியம்
பத்தியமெனவுணுயந்திடாமல், பொறுமையுடன்கிட்டின



னும், சிறிதுபெரிதுகடனதன்னியங்கணன்மை தீமைகள்சே
ரினும்படிக்கச்செயல்போற்சித்தம், வெறிதிருக்குமவனேமாத்
தியாகியாவன் விரதமிம்மூன்று [illegible] வீடுளோரே. ()

வேறு.

மெய்யுங்கொண்டுபிராரத்தந்தரு விதிவழிநின்றிடவும்
உய்யுங்கன்மிகளுக்கனுகுணமாவுறுதொழில்செய்திடவும்
செய்யுஞ்செய்கை முடிந்தவனென்றுரை செப்புவதெப்படி
நையுந்துன்பமகற்றியகுருவேநலமா ருள்வீரோ. [யோ

ஆடவர்செய்தொழின்மூவகையாகும வித்தைவசத்துறுநாள்
ஏடணைமமதையகந்தையுளார்க்கேயிகபரவிவகாரம்
வீடணுகுவமெனுமிச்சையுளார்க்கேவித்தைபடிப்பதெலாம்
பாடன்மிகுந்தொழிலாற்பலனுண்டோபரிபூரணமானால். ()

குரவர்சிகாமணியேகேளீர்நீர்கூறினவழியொக்கும், பர
முடனிகமுமிழந்தவரன்றோபழகுவர்மெய்ஞ்ஞானம், விரவு
முயற்சியின்மீண்டவரதையினிவேண்டுவரோவேண்டார், சி
ரவணமனனுதிகள்வேண்டாவோசித்தமுறைத்திடவே. ()

கிளர்மகனேகேள்தத்துவமறியார் கேட்டல்செயக்கட
னே, தளர்வறுசிந்தித்தலின்முயல்வார் சிலர்சந்தேகங்களு
ளார், தெளிதலினிற்பார்விபரீதப்பேய் திராவாதனையோர்,
வெளியுருவாயறிவாய்நிறைவாயினர் வேண்டுவதொன்றுண்
டோ. (௨௯)

ஐயாகேளீர்தத்துவஞானியு மஞ்ஞானிகள்போலே, செ
ய்யாநின்றேன்கண்டேனுண்டேன் சென்றேனெனலாமோ,
பொய்யாம்விபரீதங்களவற்குப் போயினவென்றீரோ, மெய்
யாம்*பிரமவிசாரமிதன்றே வெளியாயுளாயீரோ. (௩௦)

* பிரமவிவகாரமென்றது. பிரமவிகாரமென நடுக்கு

ஒய்ந்தகனாவிற்கண்டபழங்கதை யோதுவன்வாதனையா
ல், ஆய்ந்தறிவுற்றவனப்படி செப்புவனுபாசனாமாகரின், மா
ய்ந்தது னுடல் * வே மளவும்விண்ணவன்மநுடனெனப்படு
வான். வீய்ந்தசிதாபாசன்போமளவும் விவகாரந்தொடரும்.

ஆனாலையாகுருவேகாண்பதசத்தியமென்றாலும்,நானாவி
வகாரந்துயரல வோஞானசுகந்தருமோ,போனாலன்றோ நன்
றா நி டைபொருந்திடல்வேண்டாவோ, தானிநி டை
புரிந்தாற்செய்கை தவிர்ந்தவனெப்படியோ. (௮௨)

தெரிதருமகனேயாரம்பத்தொடு தீரும்விவகாரம், உரி
யதியானமும்விவகாரங்களு முள்ளத்தொழிலன்றோ, அரி
யபரம்பொருளானவர் வேறொருதொழில் செய்வதுமுண்
டோ, அரியசமாதிகள்பழகுவனே லவனாரூடனுமன்றே. ()

உத்தமகுருவேயாரூடருமா யொருதொழிலற்றவருட்,
சித்தமடங்குதியானாதிகள்சிலர் செய்குவதேனென்றால், இ
த்தலமருவும்பிராரத்தப் பிறிவெப்படியப்படியே, புத்தரு
ம்வெகுவிதமாகுவரென்பது முன்னேசொன்னேனே.(௮௪)

நல்லவனேகேளுலகுபகாரம் ஞானிகள்விவகாரம்
அல்லதுவேறொருபெறுபேறும் மிலையதனாற்பிணியுமிலை
வல்லசிருட்டிமுதற்பலதொழிலால் வருபுண்ணியபாவம்
எல்லவருக்குமனுக்கிரகஞ்செயு மீசனடைந்திலனே. (௮௫)

ஈசனுமாயருவாயுருவாகி யெழுந்தருளுங்குருவே
ஈசனுஞானியுமொப்பென்றீரே யெப்படியொப்பென்றால்
ஈசனுஞானியுமமதையகந்தை யிக ந்ததினாலொப்பாம்
ஈசனுமாம்பலசீவ மாமுல கெல்லாமிவனாமே. (௮௬)



எல்லாச்சீவ ருமிவனாமென் றீரிவன்றான்முத்தியடைந்
தெல்லாச்சீவ ருமுத்திபெறும லிருப்பானேனையா
எல்லாச்சீவ ரும்வெவ்வேறானா லிவனெல்லாமானான [ரோ.
எல்லாப்பொருளுமுணாத்தருள்குருவே யிதைநீர்மொழியீ

அகமெனுமான்மாப்பூரணமேகமனேகவிதஞ்சீவ ர்
அகமெனுமந்தக்கரணோபாதிகளளவிலையாதலினால்
சகமுழுதுங்குளிர்சந்திரனேகஞ்சலசந்திர ர் பலராம்
சகமதிலேரிகுளஞ்சிறுகுழிசால் சட்டிகுடம்பலவால். (௮௮)

சட்டிகுடங்களிலொன்றாநசித்திடினதினுட்சலசந்த்ரன்
ஒட்டுமுதற்சந்திரனொடுகூடுமொழிந்தவைகூடாதே
கட்டுமுபாதிநசித்திடுசீவன்காரணவான்மாவி ல
கிட்டுமையிக்கியமுபாதிகெடாதவர் கேவலமாகாரோ. (௮௯)

இவனயன்மால்சிவனாகியவீசரோடெப்படியொப்பாவன்
சிவன்முதன்மூவருமகிலசிருட்டி திதிநாசங்கள்செய்வார்
அவர்பிறர்மதிகளுமுக்காலங்களுமறிவார்விபுவாவார்
தவமிகுகுருவேயிவனுக்கவையிலோர்சற்றுங்காணேனே.()

(வேறு.)

தடத்துநீர்நிலாத்திரியொளியுபயமுந் தழுவுமூர்த்தனைக்
காக்கும், குடத்துநீர்விளக்கினிலொளியிரண்டுமோர் குடும்
பமாத்திரங்காக்கும், அடுத்தமைந்தனேஞானியுமீசனு மறி
வினாற்பிறிவில்லை, கெடுத்தமாயையின்குணங்களான் மேலெ
ன்றாங்கீழென்றாம்பிரிவா .மே (௯௧)

நரரின்மன்னனைச்சித்தை ப்போல வேநாரணன்முத

மிக்கோர், தரணிமாநடர்க்கவைகளில்லாமை யாற்மூழ்வுளரானுலும், பிரமபாவனையாலிவரவரொனும்பேத மொன்றில்லபாராய். (௬௨)

முத்திநல்கியசற்குருவே ல முனிகளுக்கணிமாதி, சித்திபூமியிற்கண்டிருக்கவுமந்தச் செல்வமீசனதென்றீர், புத்தியொத்திடவுரைத்தருளென்றிடிற் புகழுமீசனே ப், பத்திசெய்திடுந்தவத்திஞலியோகத்தாற் பலித்ததென்றறிவாயே. (௬௩)

சிவசொரூபமாந்தேசிகமூர்த்தியே சித்திமுத்திகளிரண்டும், தவமுளோரடைகுவரொனிலவர்கள்போற்சகலருமடைவாரோ, அவர்கள்பூருவஞ்சித்தியுஞானமு மடைந்ததுங்கண்டோமே, இவர்கண்ஞானிகளே ற்சித்திகளிவர்க்கிலாவகையேதோ. (௬௪)

காமியத்தவங்காமியமொன்றையுங் கருதிடாத்தவமென்றும், பூமியிற்றவமிருவகை. சித்தியும்போதமுந்தருமைந்தா, ஆமிவற்றிலொன்றியற்றினு லொன்றையேயடைகுவரிதீர்வை, யாமுரைத்தவவ்விரண்டையு மியற்றினரன்றுள பெரியோரோ. (௬௫)

அனகமைந்தனேமுத்திஞானத்தையே யடைந்தனரல்லர்மல், ஜனகன்மாபலிபகீரதன்முதலினோர் சித்திகள்படித்தாரோ, இனியசித்தியேவிரும்பினோர்சிலர் சிலரிரண்டையுமுயன்றூரம், முனிவர்சித்திகள்வினோதமாத்திரந் தருமுத்தியைத்தாராலே வ (௬௬)

யோகஞானமேமுத்தியைத்தருமெனி லொழிந்தசித்தி



ளேனென்று போகமாய்வரும்பிராரத்தகர்மங்கள் புசித்தன்றோநசித்தேகும், ஆகையாலந்தச்சித்திகள் பிராரத்தமாகுமென்றறிவாயே. (௬௭)

இலக்கமாயிரஞ்சுருதியாலூகத்தா லென்மனமசையாமல், பிலக்கவேண்டுமென்றருள்குருவேயகப் பிராந்திபோய்த்தெளிவானேன், துலக்கமானகண்ணுடியையடிக்கடி துலக்கினுற்ப்மூதன்றே, அலக்கண்மாற்றியதேவரீ ரெனக்குரைய தங்கடைவிட்டாலே ல (௬௮)

கைதவங்களைச்சாத்திரஞ்சொல்லுமோ கருணையாலெனையாளும், ஐயனேகுருவேயெவராகிலு மனுபவித்தாலன்றிச், செய்தகர்மங்கள்விடாவென்றவசனமுஞ் சென்மசஞ்சிதம்வேத; துய்யஞானத்தீச்சுடுமென்றவசனமுந் துணிவதெப்படிநானே. (௬௯)

ஜீவபேதங்களளவிலைமைந்தனே செய்கையுமளவில்லை, ஆவரவரதிகாரங்க ளறிந்துபக்குவநோக்கிப், பூவலர்ந்துபின் பலங்கள்காட்டுவபோற் பூருவஞ்சித்தாந்தம், காவல்வேதங்க ளிரண்டையும்வசனிக்குங் காண்டமூவகையாலே. (௭௰)

ஞானபாவிகளடைவ நரகங்களவசியமாகுலும், தானமந்திரவிரதவோமங்களாற்றவிருமென்பதுபொய்யோ, ஈனமாம்பலஜன்மசஞ்சிதவினை யெத்தனையாகுலும், ஞானமாங்கனல்சுடுமென்றமறைமொழி நம்பினுல்வீடுண்டே. (௭௧)

என்மனந்திருக்கோயிலாத்தினங்குடி யிருந்தருள்குரு

ய்ஞ்ஞானம், தன்மயந்தருமகிமையைவிபுதராஞ் சமர்த்தரு
மறியாமல், கன்மமாங்குழியினில்விழுந்தழிகின்ற காரணமு
ணாயீரோ. (௫௨)

அழிவிலாததற்பதந்தனைமைந்தனே யகமுகத்தவர்சேர்
வர், வழிநடப்பவர்பராமுகமாயினுன் மலர்ந்தகண்ணிருந்தா
லும், குழியில்வீழ்வர்காணப்படிவெளிமுகங் கொண்டுகாமிக
ளானோர், பழிதரும்பிறவிக் கடலழுந்துவர் பரகதியடை
யாரோ. (௫௩)

சிறந்தநன்மையுந்தீமையுமீசனார் செய்விக்குஞ்செயலன்
றோ; பிறந்தசீவர்களென்செய்வாரவர்கண்மேற் பிழைசொ
லும்வழியேதோ, துறந்ததேசிகமூர்த்தியேயென்றிடிற் சுரு
திநூற்பொருண்மார்க்கம், மறந்தமூடர்கள் வசனிக்கும்பிரா
ந்திகாண்மைந்தனேயதுகேளாய். (௫௪)

திகழ்ந்தவீசனார்சிருட்டியுஞ்சீவனார் சிருட்டியும்வெவ்
வேறே, சகந்தனிற்பொதுவீசனார்சிருட்டிகள் சராசரப்பொ
ருளெல்லாம், அகந்தையாமபிமானங்கள் கோபங்களாசைக
ளிவையெல்லாம், இகழ்ந்தசீவனார்சிருட்டிகளாகுங்கா ணீச
னார்செயலன்றே. (௫௫)

மூவராம்பரன்சிருட்டிகளுயிர்க்கெலாமுத்திசாதனமா
கும், சீவனார்செயுஞ்சிருட்டிகடங்களைச் செனிப்பிக்கும்பிணி
யாகும், தாவராதிகணசித்திடிலொருவர்க்குஞ்சனனங்க ண
சியாவர், கோபமாதிகணசித்திடிற்பந்தமாங்கொடும்பிறவிக
ள்போமே. (௫௬)

ஈசர்காரியம்பிரளயத்தொழியவு மெவர்பவமொழிந்தா



நாசமாக்கியவிவேகத்தினுயிரொடு ஞானமுத்தர்களானார்,
பாசமோகங்கள் பசுக்களின்செயலன்றிப் பசுபதிசெயலன்
றே. (௫௭)

அச்சுவத்தமென்றொருமரமதிலிரண்டரும் பறவைகள்
வாழும், நச்சுமங்கொருபறவையம்மரக்கனி நன்றுநன்றெ
னத்தின்னும், மெச்சுமங்கொருபறவைதின்றுதென வியங்
கியப்பொருளாக, வைச்சுமாமறைசீவனையீசனை வகுத்தவா
றறிவாயே. (௫௮)

இந்தச்சீவனால்வருமறுபகையெலாமிவன்செயலென்னா
மல், அந்தத்தேவனால் வருமென்றமூடர்க ளதோகதியடை
வார்கள், இந்தச்சீவனால்வருமறுபகையெலாமிவன்செயலல்
லாமல், அந்தத்தேவனாலன்றெனும்விவேகிக ளமலவீடடை
வாரோ. (௫௯)

நலமெய்யையனேயெல்லவர்க்குந்தெய்வநாயகன்பொ
துவானால், சிலரைவாழ்வித்தல்சிலரொடுகோபித்தல் செய்வ
தேனென்றுரையேல், குலவுமக்களைத்தந்தைபோற் சிட்டரைக்
குளிர்ந்துதுட்டரைக்காய்வர்கலைகணல்வழிவரச்செயுந்தண்
டமுங்கருணையென்றறிவாயே. (௬௦)

மனைவிலங்கறுமைந்தனேகற்பகமரங்கனல்புனல்மூன்
றும், தனையடைந்தவர்வறுமையுஞ்சீதமுந்தாகமுந் தவிர்த்
தாலும், அனையவீசனுமடைந்தவர்க்கருள்செய்வனன்றவ
ர்க்கருள்செய்யான்இனையகுற்றங்களவர்குற்றமாகுமென்
றெண்ணிநீயறிவாயே. (௬௧)

ஒன்றுகேண்மகனேபுமான்முயற்சியா லுறைத்துமா
நுடர்க்கீசன், நன்றுசெய்யவேகாட்டியநூல்வழிநடந்துநல்

லவர்பின்னே, சென்றுதுட்டவாதனைவிட்டு விவே[redacted]ய்ச்
செனித்தமாயையைத்தள்ளி, நின்றுஞானத்தையடைந்தவர்
பவங்கள்போநிச்சயமிதுதானே.
(௬௨)

இந்தஞானந்தான்வருவதெப்படியெனிலிடைவிடாவிசா
ரத்தால், வந்தடைந்திடும்விசாரந்தானேதெனின் மனுதியா
ஞ்சரீரத்தில், இந்தநானெவன்சித்தெதுசடமெது விரண்டு
மொன்ருக்கூடும், பந்தமேதுவீடேதெனவுசாவுதல் பகர்வி
சாரமதாகும்.
(௬௩)

போனஜன்மங்கட லனுட்டித்தநற்புண்ணியபரிபாகம்,
ஞானமாக்குமேவிசாரமெனென்றிடினுமுரைத்திடக்கேளா
ய், ஆனபுண்ணியமீசுரார்ப்பணஞ்செயினசுசிபோஞ்சுசியாகு
ம், மானதம்பினே விசாரித்துஞானத்தை மருவுமென்றறி
வாயே.
(௬௪)

பத்தியும்வயிராக்கியமும்பரலோகமுமணிமாதி, சித்தி
யுந்தவநிட்டையும்யோகமுந் தியானமுஞ்சாரூப, முத்தியுந்
தரும்விசித்திரகருமங்கண் மோகமாத்திரந்தள்ளும், புத்தி
தந்திடலருமையோவிசாரமென்புண்ணியகுருமூர்த்தி.(௬௫)

வேடமாறியபேர்களையறியவேவேண்டினுன்மகனேகேள்
கூடமாமவர்சுபாவங்கள்சிலங்கள்குறிகளாய்ந்தறியாமல்
ஓடியுங்குதித்துந்தலைகீழ்நின்றுமுயர்ந்தகம்பத்தேறி
ஆடியும்பலகருமங்கள்செய்யினுமவருண்மைதெரியாதே. ()

இன்னவாறந்தப்பிரமத்தையறிவிக்கு மிலக்கணத்தால்
வேதம், சொன்னஞானமும்விசாரத்தால்வருமன்றிச் சுருதி



சாரங்கள் யாகங்கள், என்னசெய்யினுந்தன்னைத்தா னறிகி
(௬௭)
ன்றதிவைகளால்வாராதே.

துளங்குதர்ப்பணமழுக்கறக்கைக்கொண்டு துலக்கினுற்
போமன்றி, விளங்குபுத்தியாலுலகிலார்துலக்கினுர் விமல
தேசிக மூர்த்தி, களங்கமாகுமஞ்ஞானமுமப்படிக் கருமத்
தாற்கழுவாமல், உளங்குறித்தஞானத்தினுலெப்படி யொழி
(௬௮)
யுமீதருள்வீரோ.

தர்ப்பணத்தினிற்களிம்புவாஸ்தவமலஞ் சகஜமாதலின்
மைந்தா, கற்பளிங்கினிற்கருநிறஞ்சகஜமாக் கறுத்ததன்ரு
ரோபம், தர்ப்பணத்தினிலழுக்கறவேண்டினுற் சாதனத்
தொழில்வேண்டும், கற்பளிங்கிலாரோபமேகறுப்பென் க
(௬௯)
ண்டிடமனம்போதும்.

இங்குமப்படிச்சச்சிதானந்தத்தி விடர்சடம்பொய்முன்
றும், தங்குமாயையின்கற்பிதமன்றியே சகஜவாஸ்தவமன
றே, பங்கமாகுமஞ்ஞானத்தைக்கருமங்கள் பகைசெய்யா
துறவாக்கும், துங்கஞானமேகருமவஞ்ஞானத்தைச்சுடுகின்
(௭௦)
றநெருப்பாமே.

மனைக்குள்வைத்தபண்டங்களை மறந்தவன்வருடநூற
ழுதாலும், நினைத்துணர்ந்தபின்கிட்டுமப்படியிந்தநிமலவா
ன்மாவும், அனர்த்தமானதன்மறதியைக்கெடுத்துத் தன்ன
றிவினுற்காணுமல், கனத்தகமங்க ளூறுகஞ்செய்யினுங்
(௭௧)
காணுமோகாணுதே.

நன்மையாங்குருவேசுகந்தருவதுஞானமேயெனும்வேத

தர், சென்மமாகுவ சாதியாசாரமே செய்தவஞ்சுகமென்று,
கன்மகாண்டத்தில் விதித்ததென்விதித்துள காரணமுறை
யீரோ. (௭௨)

தினமுமன்னுகர்பிள்ளைநோய்க்கிரங்கியே தீம்பண்ட
மெதிர்காட்டிக், கனமருந்துகளொளித்துவைத் தழைக்கின்
றகருணைநற்றாய்போலே, மனையறங்கள்செய் மகங்கள்செய்
நன்றென்று மலர்ந்தவாசகஞ்சொல்லும், நினைவுவேறுகாண்
சுவர்க்ககாமிகளந்தநினையத்தெரியாரோ. (௭௩)

போகமாருயிர்கண்டதையுண்பதும்புணர்வதுமியல்பே
காண், ஆகமங்களுஞ்சுபாவத்தைவிதிக்குமோ வத்தனைதெ
ரியாதோ, காகமேகறுத்திடுநெருப்பேசுடு சசந்திடுவெம்பே
நீ, வேகவாயுவேயசையெனவொருவரும்விதித்திடல்வேண்
டாமே.வ (௭௪)

கள்ளுமூனுநீவிரும்பினுன்மகங்கள்செய் காமத்தின்மன
தானால், கொள்ளும்பெண்டொடு கலவிசெய்யெனிலிவன்
குறையெலாந்தொடானென்றே, தள்ளும்வேதத்தின் சும்ம
தஞ்சகலமுந்தவிர்வதேகருத்தாகும், விள்ளுமிவ்விதியென
னிற்பூருவநியமமாம்விதியன்றே. (௭௫)

மதுவிறைச்சிகளுண்ணென்றசுருதியின் மணந்துபாரொ
னல்பாராய், மிதுனவிச்சையும்புத்திரோற்பத்தியால் விரும்
பென்றவிதிபாராய், இதையும்விட்டொழி யதிநயிட்டிகவ
ன்னிக் கிகழ்ச்சியற்றதும்பாராய், அதையறிந்துகன்மங்களா
சைகளொழிந்தானந்தமடைவாயே. (௭௬)

உலகமானவஞ்ஞானமுங்கருமமு முறவென்றவழிகூ
வேதம், ...



னால், நிலவிலேமறுப்போலவஞ்ஞானமு நிமலஞானத்தோ
டே, குலவிநின்றிந்தச்சிருட்டிகள்செய்யவுங் கூடுமோகுரு
மூர்த்தி. (௭௭)

சொரூபஞானமும்விருத்திஞானமு மென்றுசோதிஞா
னமுமிரண்டாம், சொரூபஞானமே விருத்தியின்ஞானமாய்
த்தோன்றும்வேறில்லைமைந்தா, சொரூபஞானமஞ் ஞானசத்
துருவன்று சுழுத்தியிற்கண்டாயே, சொரூபஞானத்தின்ம
ருவுமஞ்ஞானத்தைச்சுடும்விருத்தியின்ஞானம். (௭௮)

துருத்திமாயையைச் சுழுத்தியிற்சுடாததற்சொரூபஞா
னந்தானே, விருத்திஞானமாய்ச்சுட்டதெப்படியெனில் வெ
ய்யிலாலுலகெங்கும், பரித்தசூரியன்சூரியகாந்தத்திற்பற்றி
யக்கினியாகி, எரித்தவாறுபோற்சமாதியில்விருத்தியா லெ
ரிக்குமென்றறிவாயே. (௭௯)

அருளுமையனேதிரிவிதகரணத்தா லாகியதொழிலெல்
லாம், கருமமல்லவோவிருத்திஞானமுமந்தக்கரணகாரியம
ன்றோ, உரியகர்மமஞ்ஞானத்தைக்கெடுக்குமென்றோதினை
லாகாதோ, பெரியஞானமென்றதற்கொருபெயரிட்ட பெரு
மையையுளாயீரோ. (௮௦)

விருத்திஞானமந்தக்கரணத்தொடு விருத்தியாகிலுமை
ந்தா ;ஒருத்திமக்களேதங்களிற்பகைக்கின்ற துலகெங்குந்
கண்டோமே, கருத்தனாகியபுருடதந்திரங்களாங் கருமங்க
ளவைபோல, வருத்தஞானமோபுருடதந்திரமன்று வஸ்து
தந்திரமாமே. (௮௧)

வருத்தகர்மங்கள்செய்யவுந்தவிரவு மற்றொன்றாக்கவ

னும்வேறே, செகத்திலொன்றையொன்றுவிவன்பாவிக்குந்தியானங்கற்பிதயோகம், முகந்தமாக்கண்ட ஞானமே வாஸ்தவமோகமாய்மயங்காதே. (௮௨)

கண்டறிந்ததுஞானங் கேட்டதுதனைக் கருதுபாவனையோகம், கண்டபேர்சொலக்கேட்டதுமறந்துபோங் கண்டதுமறவாதே, கண்டவஸ்துமெய்தியானவஸ்துக்கள் பொய்கருவியஞ்ஞானத்தைக், கண்டவக்கணங் கொல்வதுஞானமேகருமமன்றறிவாயே. (௮௩)

சருவமுத்தியைத்தருகின்றதியானமுஞ்சத்தியமன்றென்றால், சருவமுத்தியுஞ்சத்தியமன்றென்றசங்கியாதேநீகேள், உருவங்கேட்டவன்றியானிக்கும்பொழுதி லவ்வுருவம் வாஸ்தவமன்றே, உருவமாகும்ப் பொழுதுகண்ணுற்கண்டவுருவம்வாஸ்தவமாமே. (௮௪)

சடமதாகியதியானமெய்யாகிய சர்வமுத்தியைநல்கும், திடமதானதெப்படியெனிலவரவர் தியானமேபிறப்பாகும், உடலமாசையாற்றியானிக்கிற்றியானித்த வுடல்களாகுவர் மைந்தா, தொடர்பவங்கெடச்சொரூபமேதியானிக்கிற் சொரூபமாகுவர்மெய்யே. (௮௫)

பிரமரூபத்தைத்தியானித்தபேர்களும் பிரமமாகுவரென்றால், நரசிரமாங்குரவனேவிசாரமேன் ஞானமேனென்றதே, பரமபாவனைபரோக்ஷமாம்பின்புந்தப் பரோக்ஷமேயபரோக்ஷம்..திரவிசாரமாஞானமாமுத்தியாந் தீர்வையீதறிவாயே. (௮௬)

வீடதாம்பரிபூரணசொரூபத்தில் விருத்திஞானமுங்கூ



றால், சாடிநீர்மண்ணைப்பிரித்ததேற்றாம்பொடி தானுமன்றொடுமாயும், ஊடிஞானமுமறிவிலாமையைக்கெடுத்தொக்கவேகெடுந்தானே. (௮௭)

இந்தநிச்சயமுத்தருளனுபவ மிருப்பதெப்படியென்றால், சிந்தையற்றபூமண்டலவிராசனுஞ் சிசுவும்போற்சுகமாவர், பந்தமுத்திகண்மறந்துபோமுண்டென்று பலர்சொலினகையாவர், அந்தரத்தையுண்டுமிழ்ந்ததோர் கொசுகெனுமவர்க்கெநகையாரோ. (௮௮)

மலடிமைந்தனுந்தாணுவிற்புருடனும் வான்மலர்முடிசூடி, இலகுகந்தர்ப்பநகரிலே சுத்திகையிரசதம்விலைபேசிக், கலகமா[illegible] கத்திருவருமாண்டார், அலகையாயினுமொனும்விவகாரத்தையறிந்தவன்மயங்கானே. (௮௯)

மாயையென்பதுபொய்யெனிலது பெற்றவகையெலாம்பொய்யாமே, தாயையன்றிமக்களுக்கொரு பிறவியுஞ்சாதியும்வேறுண்டோ, சேயசொர்க்கமுநரகமுநன்மையுந் தீமையும்பாராமல், தூயசத்துச்சித்தானந்தபூரணசொரூபமாயிருப்பாயே. (௯௦)

பங்கயாசனன்முதற்பலதேவரும் பாருளபெரியோரும் கங்கையாதியாந் தீர்த்தமுந்தேசமுங் காலமுமறைநாலும், அங்கமாறுமந்திரங்களுந்தவங்களு மசத்தியமெனச்சொன்னால், எங்களையகனேயதனாற் குற்றமில்லையோமொழியீரோ. (௯௧)

சொற்பனந்தனிற்கண்டதைப்பொய்யென்று சொல்வ

தெனல்பிழையாமே, சொற்பனந்தனிற்கண்டதைப் பொய்யென்றுசொல்லலாமெனின்மைந்தா, அற்பமாயையிற்றோன்றியசகமெலாமசத்தியமெனலாமே. (௯௨)

பொய்யைமெய்யென்றமூடர்புண்ணியமொன்று புராணங்கூப்பிடுமானால், மெய்யைமெய்யென்றஞானிக்குக் குற்றங்கள்விதித்தசாத்திரமுண்டோ, பொய்யதேதெனினுமருபங்களாம் பூதமாகியமாயை. மெய்யதேதெனிற்சச்சிதானந்தமாய் வியாபிக்குமான்மாவே. (௯௩)

மாயையென்பதேதுடையராரொப்படி வந்ததுவுருவானேன், மாயையென்பதுபிரமத்தின்வேறெனின் வஸ்துவுமிரண்டாமே, மாயையென்பதும்பிரமமுமொன்றெனின் வஸ்துவும்பொய்யாமே, மாயையென்றமேகங்களுக்கொரு சண்டமாருதக்குருமூர்த்தி. (௯௪)

அதனையின்னதென்றுரைத்திடப்படாமை யாலவாச்சியவடிவாகும், இதுதனக்குளதடலி[illegible]ானுலகுமெய் யெனுமவருடையோர்கள், கதையிலாதபொய்வந்ததிப்படியென்று கண்டபேரிலைமைந்தா, விதனமாயையேன்வந்ததென்றூற் புத்திவிசாரமற்றதனாலே. (௯௫)

அருவமாகுமாயாவிவித்தைகள்விளையாடுமுன்றெரியாவே, உருவமாம்பலகந்தர்ப்பசேனையாயுதித்த பின்வெளியாகும், பிரமசத்திக[illegible]ளானந்தமாமதைக்கண்டு பிடித்திடக்கூடாதே, பரவுபூதங்கள்கண்டனுமானத்தாற் பலருக்கும்வெளியாமே. (௯௬)

காரியங்களுஞ்சத்தியாதாரமுங் காணுமற்றதுமாயம்,



வீரியந்திகழ்வித்தையாயினசத்தி வெளிப்படாததுபோலே; பெரியப்பிரமத்துக்குமுலகுக்கும் பிறிதிசத்திகளுண்டே. ()

சத்திசத்தனைத்தவிரவேறன்றுகாண் சத்தனுமாயாவி, வித்தைகாட்டியவிந்திரசாலம்பொய் வித்துவான்மெய்[illegible] போ[illegible], ப்புத்திமைந்தனேசத்திமானாகிய பூரணவான்மாவின், வஸ்துநிர்ணயஞ்சொன்னதிட்டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே. (௯௮)

இல்லையாகியசத்தியையுண்டென்பதெப்படியெனக்கேட்கில், புல்லையாதியாமசேதனப்பொருளெலாம் பூத்துக்காய்ப்பன[illegible]பாராய், நல்லையாமகனேயதி[illegible]ற்சிற்சத்திநடந்திடாதிருந்தக்கால், தொல்லையாய்வருஞ்சராசரவுயிர்க்கெலாஞ்சுபாவங்கள்வேறாமே. (௯௯)

கருப்பைமுட்டையுட்பறவைகள் பலநிறங்கலந்தசித்திரம்பாராய், அருப்பமாஞ்சத்திநியமமில்லாவிடி லரசிலாநகர்போலாம். நெருப்புநீர்த[illegible]ாங்கசப்புமேமதுரமா நீசனுமறையோதும்,பொருப்புமேகமாங்கடலெலாமண்களாம் புவனமிப்படிப்போமே. (௧00)

ஆர்க்குங்காணவுமறியவும்படாதென்று மவாச்சியவடிவென்றும், சேர்க்குநாமரூபப்பயிர்வித்தென்றுஞ் செப்பியசிற்சத்தி, பேர்க்குமாறெங்ஙன்பிறித்திடப்படாதெனிற் பிரமபாவனையொன்று[illegible]ப், பார்க்குமாறெங்ஙன்முத்தியாகுவதெங்ஙன் பரமசற்குருமூர்த்தி. (௧0௧)

வாயுஸ்தம்பனஞ் சலஸ்தம்பனம் மணிமந்திரமருந்தாலே, தேயு[illegible]தம்பனஞ்செய்திடலதிலதிற் சிறந்தசத்திகளை

பாயேல், மாயச்சத்திபோமீதன்றிமந்திர மறைகளிற்காணேமே.
(௧௦௨)

மேவுமண்ணிலவ்வியத்தமேவியத்தமாம் விவகரித்திடவேண்டில், நாவினுன்மண்ணைக்குடமென்பரக்குட நசிப்பது நாவாலே, பாவுநாமரூபங்களைமறந்துமண் பார்ப்பதேபரமார்த்தம், சிவபேதகற்பிதங்களைமறந்துநீ சின்மயமாவாயே.
(௧௦௩)

பூரிக்குங்கனசச்சிதானந்தத்திற்பொய் சடந்துயர்மூன்றும், தூரத்தாயினுந்தோன்றுபாழ்விபரீதந் துலைடப்பதெப்படியென்றால், நீரிற்றோன்றுந்தன்னிழறலைகீழதாய் நின்[illegible]லையினுநேராய்ப், பாரிற்றோன்றியதன்னைநோக்கிடலந்தப் பாழ்நிழல்பொய்யாமே.
(௧௦௪)

ஞானங்காரணமறி[illegible]காரியநாமரூபப்பேய்கள், ஆனதெப்படியழிந்ததெப்படியென வாய்குதல்பலனன்றே, மானமைந்தனே தீர்க்கசொற்பனசகம்வந்ததும் பாராமல், போனதுந்நினையாமலுன்போதமாய்ப்பூர்ணமாயிருப்பாயே

அசத்திலெம்மட்டுண்டம்மட்டும்பராமுகமாகினலம்மட்டும், நிசத்திலுள்விழிப்பார்வையாமிப்படிநிரந்தரப்பழக்கத்தால், வகுத்திலுன்மனநின்றுசின்மாத்திரவடிவமாயிடின்மைந்தா, கசத்ததேகத்திலிருக்கினுமானந்தக்கடல்வடிவாவாயே. ()

(வேறு.)

தானன்றிவேறொன்றுமில்லாதபூரணச்சச்சிதானந்தகுணமாய், ஊனின்றவுயிர்கோ[illegible]



யொக்குஞானங்கள்வெளிகண்டதால், ஆனந்தமிதுபோல் வெளியாகவுதியாதவடைவேதுகுருநாதனே. (௧௦௭)

உருவங்களிரதங்கள் பரிசங்களொருபூவி லொன்றுகுமென்றாலுமே, கரணங்களோரொன்றிலோரொன்றுதெரியுங்கணக்கன்றிவாராதுகாண், அருமந்தசச்சிதானந்தச்சுபாவங்களான்மாவின் வடிவாகிலும், பிரபஞ்சமயமாம் விருத்திபேதத்தினாற்பேதங்களாமைந்தனே. (௧௦௮)

தாமதமிராசதஞ்சாத்துவிதமுக்குணத்தால்வரும்விருத்திமூன்றும், ஆமவைகண்மூடமுங்கோரமுஞ் சாந்தமுமபிதானமாகுமகனே, ஏமுறவிருக்கின்றசச்சிதானந்தங்களென்றென்றுமொன்றாகிலும், நாமுனாக்கும்விருத்திப்பிறிவினாற்சொரூபஞானதிபிறிவாகுமே. (௧௦௯)

சடமானமூடத்தருக்கல்லு மண்களிற்சத்தொன்றுமே தோன்றுமால், விடமானகாமாதிகோரத்திலானந்தம்விளையாதுமற்றவைகளாம், திடமானவொழிவாதி சாந்தத்திலே சச்சிதானந்த மூன்றும்வெளியாம், மடமானமூடங்கள் கோரங்கள்விடுசாந்தமனமாகிலானந்தமே. (௧௧௦)

இகமானகுருநாதனேசச்சிதானந்தமெனுமிலக்கணமறிகிலேன், அகலாதசத்தாவதேதுசித்தாவதேதானந்தமேதென்றிடில், மிகுகாலமூன்றுங்கெடாதிருப்பதுசத்து வேறுபாடறிதல்சித்தாம், மகிழ்காமநுகர்போதுசுகமாகுமநுபூதிவாழ்வென்பதானந்தமே. (௧௧௧)

நாசச்சரீரத்திருக்குஞ்சரீரிதனை நால்வேதமாவாக்கிய

மெங்ஙனே, கோசப்புரங்களையிடித்துத்தகர்க்குமத குஞ்சர க்குருநாதனே. (ககஉ)

சென்மாந்தரஞ்செய்தவினைகளுடனருமெனிற் செல்கா லமிவனுண்டலோ, கன்மாநுபவநரகசொர்க்கமெனில் வரு கின்ற காலத்துமிவனுண்டலோ, உன்மாதயாதன வுடல்கட வுளுடன்மநுடவுடன்மாறிமாறியழியும், தன்மாயவுடல்கெ டினு மிவனிருப்பதுகொண்டு சத்தென்பதொக்குமகனே. ()

இருளாகமூடுஞ்சுழுத்தியிலிராத்திரியி லிரவிசுடரற்ற பொழுது, மருளாமலிருளையும் பொருளையுந்தெரிகின்ற வகைகொண்டுசித்தாகுமே, பெருவாழ்வுமிக்கதானேதன்னி டத்தினிற் பேராதபிரியமதனல், அருகாதபிரியஞ் சுகத்தில் வருமாதலா லானந்தமாமைந்தனே. (ககச)

அன்னபானுதிசுகசாதனமதாகையா லார்க்கும்வெகு பிரியமாகும், இன்னவாருன்மாவுமானந்தசாதன மெனக்க ருதல்பொருளல்லவே, சொன்னவான்மாவையொரு சுகசா தனங்களொடு சொல்லுவாயாகின்மகனே,உன்னதானந்தம் வேறேதனுபவிப்பதாருபயவான்மாவுமுளவோ. (ககரு)

விடயசுகமதில்வருதல்பிரியமாத்திரமாகும் வெகுபிரிய மான்மாவிலாம், விடயசுகம்வருபிரிய மாறிவருமான்மாவில் வெகுபிரியமாறுதுகாண், விடயசுகம்விடலுமாங் கொளலு மாமான்மாவைவிடுவதெவர் கொள்வதெவர்பார், விடயசுக போகங்கள்விடுமவனையவனல்விடப்படாதொருநாளுமே.()

வேகின்றகோபங்க ளாலென்னைநான்கொன்று விடு

ல்லுமவனல்விடப்பட்டதேகமவன் லவன் மகனே, ஆகந்தனிற் கோபமிலதுதனையொருநாளு மான்மாவெறுப்பதிலையே. ()

தாகப்படும்பொருளிலும்மகன்பிரியமாந் தனையனிலுமு டல்பிரியமாம், ஆகத்திலும்பிரிய மிந்திரியமாங்கரண மதனி லும்பிரியமுயிராம், ஏகப்பிராணனிலும் வெகுபிரியமான்மா விலிந்தவான்மாமுக்கியம், ஊகத்தினற்கௌணமித்தைகர்த் தாமூன்றுமோரொன்றிலதிகமகனே. (ககஅ)

கெடலானபொழுதிவன்காணிக்குமகனுன கெவுணவா ன்மாமுக்கியம், விடலாதவுடலம் பரிக்குநாளுடலான மித் தையான்மாமுக்கியம், திடமானநன்மைகதி வேண்டினற் கர்த்தனுஞ்சீவவான்மாமுக்கியம், சடமாயுமுத்தியினின் ஞா னவான்மாவானதானேமகாமுக்கியம். (ககக)

புலியுமனுகூலமெனிலிட்டமாம்பகைசெயிற்புதல்வனெ னிலும்வெறுப்பாம், உலகிலிருவகையுமல்லாதபுல்லாதியிலு தாசினமாமாதலால், மலினமறுசின்மயன் பலவகையுமிப்ப டி மகிழ்ச்சியில்விருப்பமிகழான், அலகிலானந்தவடிவாகுமு ன்சொருபத்தையாராய்ந்துபார்மைந்தனே. (கஉ0)

மானஞ்சிறந்தகுருநாதனேயானந்த வகைகளெத்தனை யென்னிலோ, ஞானந்திகழ்ந்தபிரமானந்தம்வாசனு னந்தம் விடயானந்தமென், றானந்தமூன்றவித மெட்டுவகையென் பர்சிலரவ்வைந்துமிதிலடக்கம், யானந்தவகைசொலக் கே ண்மைந்தனேயெட்டு மிதின்னதின்னதெனவே. (கஉக)

போகத்தில்வருசுகம் விடயசுகத்தினாப் போதுள

முற்றசுகநிஜசுகமதாம், ஏகத்தைநோக்கலத் துவிதசுகம்வாக்கியமெழுந்தசுகஞானசுகமே. (௧௨௨)

இவ்வாறுரைசெய்ந் சுகபேதங் களினியல்பாம்வகைசொலமகனேகேள், ஒவ்வாநனவினி லுழல்வானிடர்கெடவுறங்குஞ்சயனமதுறுநேரம், செவ்வாமனமகமுகமாமதிலொளிசித்தின்சுகநிழல் சேருங்காலை, அவ்வாறிவனுள மகிழ்வாமநுபவமதுதான்விஷயசுகானந்தம். (௧௨௩)

ஈனந்தருசுகவிடயந்திரிபுடி யிடராமெனமன மசையாமல், சேனந்தனதுகுலாயந்தனில்விழு செயல்போலத்திரைசெறிசிவன், தானந்தமில்பரனுடனென்றுவனொரு தனையல்லதுபிறநினையாமல், ஆனந்தமயமாவன்சுகமிகு மதுதானுயர்பிரமானந்தம். (௧௨௪)

தூங்குஞ்சுகமதுபிரமச்சுகமெனல் சுருதிப்பொருள்விழி துயில்வோர்கள், தாங்கும்மலரணைநன்றாகச்சிலர் சம்பாதிப்பதுதானாகும், தீங்குநன்மையு மாண்பெண் முறைமையுந் தெரியாதமளிசெய் பொழுதேபோல், ஆங்குள்வெளிகளுமறியாவநுபவ மதனாலதுபிரமானந்தம். (௧௨௫)

உதவும்புவியினி லொருவன்னநுபவ மொருவன்மனதினிலுதியாதே, மதியுங்கெடுகி[illegible]ற துயில்கொண்டானந்த மயனன்றேசுகமுறுகின்றான், இதுவிஞ்ஞான மயனுஞ்சிந்தையினினைவாய்வந்தி[illegible]லழகன்றே, சுதைவிண்ணோர்புகழ் குருவேநீரிதுசொல்லீர்சகலமும்வல்லீரோ. (௧௨௬)

செய்யும்வெண்ணெயு மிருபேர்களுமறி நினைவிற்பிரிவநிவினிலில்லை, செய்யுந்நனவினிலிறுகும்மனதொடு சேருஞ்சி



ஞானச்சுகமுனுமானந்தன், பெய்யுந்துளிகளு நீருங்குளமொடுபாகும்போலிவர் பிறிவன்றே. (௧௨௭)

ஒன்றாகியபிரமானந்தச்சுக மொழிவானேன்வெளிவருவானேன், என்றான்முன்செய்த கருமம்வெளியினி லிழுக்குஞ்சுழுத்திவிட்டெழுந்தோறும், நன்றாயினசுக மகலான்வெளியிலுநடவான்மறதியும் பெறமாட்டான், அன்றாமெனவிருந்துறங்குஞ்சிலகண மதுவேவாதனை யானந்தம். (௧௨௮)

அந்தக்கணமுடலகமென்றிடர்களி லலைந்தேசுகந்தனைமறந்தேபோம், முந்தைச்செயும்வினை சுகதுக்கந்தரு மோனந்தருநடுவடிவேகாண், எந்தப்புருடனு மொருசிந்தையுமறவிருந்தேனெனலநுபவமாகும், இந்தப்படித னுதாசீனச்சுகமிதுவேநிசமெனு மானந்தம். (௧௨௯)

நிசமானதுமுக்கியமோகுடத்துள நீரன்றேவெளியீரந்தான், வசமாவகங்கரமறைந்தானிசமது படிந்தான்முக்கியவகையாகும், இசையார்திரிசயமறியாதேதுயில் செறியாதேயுடறறிபோலே, அசையாதேமதி சமமாகியநிலையதுதான்முக்கியவானந்தம். (௧௩௦)

மநுடன்மநுடகந்தருவன்றேவகந்தருவன்பிதிராசானசுரன், றனுடன்கருமத்தேவன்முக்கிய சுரரிந்திரனவனாசானுங், கனவிராட்டிரணியகர்ப்பன்முறைகருதுமிப் பதினொருபேரின், பினவானந்தங்களுளாயாம்பிரளய வெள்ளக்கடல்பிரமாநந்தம். (௧௩௧)

எவனாகிலுமிந்தத்துரியாதீதத்தி லேழாம்பூமியி லிருந்தானேல், அவனாரதன்சுகன் சிவன்மாலயன்முத லறிவோ

முன்சொல்லியுவிவகாரி, உவமானமுமறி மகனேயவனடியுதிரும்பொடிகளென் முடிமேலே. (௧௩௨)

(வேறு.)

இந்தவாறைந்துசுகஞ் சொல்லினோம் வித்தைசுக மினிமேற்சொல்வோம், முந்தமாயையுஞ் சச்சிதானந்தப் பொருளுமேமொழியும்போதில், அந்தமாமத்துவிதசுகமான்ம சுகமிரண்டுமங்கேசொன்னோம், தொந்தமாற்றிய மகனேயின்னமுனக்கையமுண்டேற்சொல்லுவாயே. (௧௩௩)

குகன்றனையுமெனையுமுலகினையுமீன்றளித்தருளுங் குருவேகேளீர், புகன்றசச்சிதானந்தப்பதங்கடனித்தனியாகிப் பொருள்வேறானால்,உகண்டமனமுறைப்பதெங்ஙன்பரியாயபதங்களைப்போலுறவு காணேன், அகண்டமாயொருசுவையாய்த்தேனிக்கூட்டியமதுவாவறிவிப்பீரோ. (௧௩௪)

துளிரிளகல்வெண்மையென்றபதங்களினானீர்மூன்றுகூறாயிற்றோ, ஒளிதவனஞ்செம்மையென்றபதங்களாலக்கினியுமொருமூன்றாமோ, வெளிமுதலாஞ்சகமசத்துமூடமிடனெனப்பிரித்துவிலக்கிவேதம், எளிதறியமுரண்மொழிந்தசத்தாதியெனும்பிரமமேகந்தானே. (௧௩௫)

நித்தியம்பூரணமேகம்பரமார்த்தம்பரப்பிரமநிதானஞ்சாந்தம்,சத்தியங்கேவலந்துரியஞ்சமந்திருக்குக்கூடஸ்தஞ்சாக்ஷிபோதம், சுத்தமிலக்கியஞ்சனாதனஞ்சிவன்றத்துவம்விண்சோதியான்மா, முத்தம்விபுசூக்குமமென்றிவ்வண்ணம்விதிகுணங்கண்மொழியும்வேதம். (௧௩௬)

அசலநிரஞ்சனமமிர்தமப்பிரமேயம்விமலம் [illegible]



மனந்தமவினாசிநிர்க்குணநிட்களநிரவயமனாதி,அசரீரமவிகாரமத்துவிதமெனவிலக்காமனேகமுண்டே. (௧௩௭)

இன்னவகைவிதிவிலக்குக்குணங்கணன்றாய்ச்சேர்ந்தொருமித்தெல்லாங்கூடிச், சொன்னபொருளொன்றன்றியிரண்டில்லையொருபொருளைச்சொல்லுஞ்சொற்கள், பின்னபதமாமதனாற்சத்தாதி குணப்பொருளாம்பிரமமேகம், அன்னபொருளொருமையறிந்தகண்டபரிபூரணமாயாவாய்நீயே.

நிர்க்குணவஸ்துவின்குணங்களுரைப்பதுதாய்மலடியெனநிகரொன்னாதே, சற்குணனேவஸ்துநிலையுரையாமலறியவல்லசதுரருண்டோ, நற்குணவேதங்களிந்தச்சீவன்முத்திபெறப்பிரமஞானந்தோன்றச், சொற்குணங்கள்பிரமத்தின்குணங்களன்றுபிரமமாஞ்சொரூபந்தானே. (௧௩௯)

மோகவிருள் கெடக்கோடியருணனென வருகுருவேமொழியக்கேளீர், ஏகபரிபூரணமாமென்சொரூபமென்னுளத்திலிருக்கும்வண்ணம், ஆகமங்கள்சொன்னபடியென்னையகண்டார்த்தமாவறிந்தேனையா, ஊகமுமொத்திடவுரைத்தாற்பசுமரத்திலாணிபோலுறைக்குநெஞ்சே. (௧௪௦)

சத்தேசித்தாகுமயலெனிலசத்தாமசத்தானாற்சாக்ஷியெங்கே,சித்தேசத்தாகுமயலெனிற்சடமாஞ்சடங்களுக்குத்திதியுமில்லை,ஒத்தேதோன்றியசத்துஞ்சித்துநல்லசுகமாகுமூகத்துக்கோர்,வித்தேயன்னியமாகிற்சடமசத்தாஞ்சுகாநுபவம்விளைந்திடாதே. (௧௪௧)

வீயாதசத்துமுன்னம்விளங்குவதுதன்னாலோவேறான்

